First Thousand.

VOL. XV]. **AUGUST, 1906.** REGISTERED.— M. 108 [No. 4.

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணு.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவிலை விவரம்.
ஒருவருஷத்துக்கு ரு. 4
6 மாதத்துக்கு ,, 2-2




**DEVOTED TO TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

**A HIGH THOUGHT REVIEW**
**TAMIL MONTHLY**
*Estd. May 1892.*

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்கவதற்குத்தக.—திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS, ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.

**Hitch your wagon to a star—Emerson.**

## CONTENTS.



## அடக்கம்.



**"Our Theism is the Purification of the Human Mind"—Emerson.**

Thick Paper Edition for Patrons.] **PUBLISHED BY** [Minimum Subscription, Rs. 5;

**The Secretary, Diffusion of Knowledge Agency,** | 2, Sydogy Lane, PYCROFT'S ROAD.

***Anandashrama, Triplicane, Madras.***

**For Satyananda of the Ananda Mission.**

Thin Paper Edition for the People.] *Copy-right.* [Subscription Price: Yearly Rs. 4.

*"Like a Spider, like the earth, and like a living creature He produces the Universe."—Upanishad.*

*"This world's no blot for us*
*Nor blank; it means intenselyand means good.*
*To find out its meaning is my meet and drink."—Browning*

"பிறந்து முனைவை மறுத்துப் பிரபஞ்ச
விசுத்த முனைவதே வீடு."—ஒளவைக்குறள்.

## EXORDIUM
## ON
## "WALKING THE STRAIGHT PATH."

[*By the Author of the Mystery of Godliness.*"]

"By means of these sacred institutes of civilization, called home, school and profession, married life, and society, industrial arts and amusements, He bade us to attain the fullness of individual development called PERFECT LOVE, RIGHTEOUSNESS, PEACE, OR SPIRITUALITY. If we bear in mind that these great institutes of civilization were granted to us for the purpose of working out our salvation to the best of ur power, by always preferring the needs of the spirit,—by subordinating the demands of the body to the requirements of the spirit, we shall walk straight, that is, progress direct to the Spirituality.

"This doctrine of True Life is not an idle thing nor useless to man individually or nationally. The practice of the doctrine of Progress * in the illuminated path develops CHARACTER in the individual and strengthens him immensely for wordly work, and it prolongs national life and prosperity. From the remotest times nation after nation like Babylonia, have risen and fallen, but India alone, which has guided itself by this doctrine of spirituality, has been, and is at present as strong inspirituality as it ever was in days of yore.

"I shall be glad indeed if you will reflect a little upon what I have told you. I am as hard a worker as any one of you, in wordly life. Working as I do right in the midst of worldly life, as a student, a married man, a lawyer, a politician, a man of business, I have attained a little spirituality and much strength and peace. In all the spheres of duty I have been placed in, I have for the best part of my life gazed on spirituality and things of the spirit, considering the world as the appointed path to God. If you think all the example of my life is merely an idle dream, I say, my brethren, you are welcome to believe so, but I, for my part, must tell you that that belief would be the greatest mistake of your life"—The Hon'ble Mr. P. RAMANATHAN, His Majesty's Solicitor-General, Ceylon, before a crowded meeting of the HRVARD UNION OF HARVARD UNIVERSITY, AMERICA.

* The Doctrine of Progress as he tellingly explained in lucid terms is '*the process of walking straightway to the Goal.*'

"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End.*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"Hitch your Wagon to a Star." "To Thine Own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 15.] 1906-ம் ஆகஸ்ட்மீ. [சஞ்சிகை 4.

# "WOMAN AS THE MOTHER IS THE BEGINNING OF LIFE"

## ஸதாசிவகுடும்பினி.

"But Science is now beginning to lend a willing ear to Anything, because it is also beginning to realize its own illimitable power. I say *realize* - not merely conjecture......So, as the flower precedes the fruit, Imagination and Poetry precede Reason, and Woman Man. Yet the same early influence ever reappears in the perfected work, even as Paracelsus observes that the Leaf, which is the hand of the tree, by mysterious palmistry ever shows in its ribs the whole trunk and branches of the perfected growth. This resemblance is indeed remarkable in such trees as the lime or linden and maple. But, as the pedestal in Romanesque architecture often resembles the capital, so the root or base is like this in our souls, that it precedes the flower, even so Woman as the mother is the beginning of life."—*Leland.*

"ஸர்வகாரணபூதாசக்தி" ஸ்வரூபமாயிருக்கும் ஆதிபராசக்தியே "ஸ்ரீசப்தமும் ஸ்ரீவித்தையும் விளங்கும் உண்மைத்தாய்" என்று அந்தப் பராசக்தியின் ரஹஸியநாமங்களில் பிரதானமான "ஸ்ரீமதா" என்னும் நாமத்தைக்கொண்டு விவகரித்தோம். இப்பொழுது அந்த ஆதிபராசக்தியிலிருந்து ஜகம் உண்டானதைக்கொண்டு அவளுக்கு வந்த "ஸதாசிவகுடும்பினி" என்னும் இரகஸிய நாமத்தைக்கொண்டு ஸர்வசாஸ்திரப்படிக்கும் இது உண்மையாயிருப்பதைச் சூசிப்பித்துக்காட்ட நினைத்தோம். மேற்றிசையார் "Origin of Life"—ஜீவகாரணம் இன்னதென்று கண்டறிய முயற்சித்து வருகிறார்கள். ஆனால் அவர்களில் மஹாபுத்திசாலிகளும் ஆத்ம ஞானமுள்ளவர்களுமான சிலரைத் தவிர மற்றவர்கள்,

நுனிமரத்திலிருந்துகொண்டு அடிமரத்தைவெட்டும் அசடனைப்போல, ஜீவகாரியமான (ஜீவ விருக்ஷத்துக்குக் கிளைகளையொத்த) கருவிகரணேந்திரியங்களைக்கொண்டு ஜீவகாரணத்தை (ஜீவன்லயமாகி உற்பத்தியாகும் முகற்பொருளை) த்தேடியறிய முயலுகிறார்கள். அவர்கள் முயற்சி பலிக்காதது அதிசயமல்ல. ஆயினும் அவர்கள் விடாமுயற்சி பூரணமாகவுள்ள திடபுருஷர்களாதலால்,

"தெய்வத்தானுகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலிதரும்."—திருக்குறள்.

என்னும் அருள்வாக்குப்படி, அவர்கள் முயற்சி வீண்போகாமல் உண்மையை யொருவாறு இலைமறவு காய்மறைவாகக்கண்டு களித்துவருகிறார்கள். உதாரணமாக இதற்கு மேலே வரைந்துள்ள இங்கிலீஷ் குறிப்பில் அதைபெழுதிய லீலண்ட் என்னும் அமெரிக்காவிலுள்ள ஹார்வார்ட் யூனிவர்ஸிடி வித்வான், ஸ்ரீவித்தையின் மர்மத்தை, சாஸ்திராராய்ச்சி யுண்மைகளைக்கொண்டே வெகு சூக்ஷ்மமாகவும் தந்திரமாகவும் கண்டுபிடித்து "The Alternate Sex" என்னும் பெயர்கொடுத்து ஒரு கிரந்தம் எழுதியிருக்கிறார். அவருடைய கருத்து என்னவென்றால், புருஷரூபத்தில் ஸ்ரீசக்தியும், ஸ்ரீரூபத்தில் புருஷ சக்தியும் அந்தர்ப்பூதமாக அமைந்திருக்கிறது என்பதேயாம். புருஷனுக்கு ஸ்ரீவித்யை உபாசனையும், ஸ்ரீகளுக்குப் புருஷபக்தியும் புருஷார்த்தங்கள் நான்கையுமளிக்கத்தக்க இன்றியமையாச் சாதனங்களாக ஏற்படுத்திய நமது ரிஷிகளின் கருத்தும் இதுவே. நமது ரிஷிகள் ஸ்வானுபவத்திலிருந்து தீர்க்க திருஷ்டியால் பூரணமாய் வரைந்துள்ளதை இவர்கள் அரைகுறையாகத் தெரிந்தும் தெரியாமல் எழுதுகிறார்கள். இதற்குக் காரணம் என்னவென்றால் அனுஷ்டானக் குறைவும் ஸ்வானுபவமின்மையுமேயாம். ஆனால் அவர்கள் கண்ட மட்டில் எதையும் ஐயந்திரிபற நன்றாக வெடுத்துரைக்கிறார்கள். இது அவர்களிடத்திலுள்ள தோர் சிலாகிக்கத்தக்க குணம். நம்மவர்கள் மனப்பால் குடித்து மதங்கொண்டுளருவதிலும் அவர்கள் மாயப்பால்குடித்து மயக்குற்றுரைப்பது அதிதீர்க்கமாயும், தெளிவாயுமிருக்கிறது. ஏனென்றால், விடாமுயற்சி விசேஷத்தால் அவர்கள் பிடித்தபிடி விடாமலுழைத்து வருகிறார்கள். நம்மவர்கள் முயற்சிகுன்றி அயர்ச்சிமிகுந்து இடையிடையே அலுத்து நின்றுவிடுகிறார்கள். இது நிற்க.

"ஸதாசிவகுடும்பினி" என்பது தேவியின் இரகஸிய நாமங்களில் ஒன்று. ஸதாசிவ தத்துவம் என்றுமுளதாய்ச் சொல்லும் ஏற்றமுள்ள ஸத்ரூபம்; அதாவது "அஹமஸ்மி"—"நானிருக்கிறேன்" என்பதின் வாச்சியார்த்தத்தில் மறைந்துள்ளதோர் நித்திய தத்துவமாம். இந்த ஸத் தத்துவத்தோடு சித் என்னும் சக்தி என்றும் இணைபிரியாது சேர்ந்தேயிருக்கிறது. ஆனால் அது பிரவிர்த்தித்தாலன்றி ஜகமில்லை. சித் சக்தியின் பிரவர்த்தியினாலேயே ஜகமுண்டாயிற்று. இந்தப்பிரவிர்த்தியும் சித் சக்திக்கு சத்தினுடைய சேர்க்கையின்றி யின்மையால், ஜகத்சிருஷ்டி சத்தும் சித்தும்சேர்ந்து குடித்தனம் செய்வதால் உண்டானதென்பதைக் குறிப்பிக்க, தேவிக்கு ஸதாசிவகுடும்பினியென்கிற இரகஸிய நாமமுண்டாயிற்று. இதை அப்பியாசிகள் உள்ளபடியாராய்ந்து அனுஷ்டான முதிர்வில் கண்டுகொள்ள வேண்டியது. மேற்றிசையார் வழிபற்றிச் செல்பவர், ஆதியில் உயிர் உண்

டானதின் மர்மத்தையுள்ளபடி யாராய்ந்துப்புங்கால் உண்மையிதென்று மிஸ்டர் லீலண்ட் என்பவர் அவருடைய புத்திநுட்பத்தாலும் ஆத்மபுத்தி விசேஷத்தாலும் கண்டுணர்ந்தது போல் ஒருவிதத்தில் கண்டுகொள்வார்கள். மேலே விவரித்துரைக்கில் அநர்த்தமாய் முடியுமாதலால், இந்தமட்டும் உண்மையையுணரும் வழியைச் சூசிப்பித்துக் காட்டியதோடு நிறுத்தவேண்டியதாயிருக்கிறது. ஓம் தத்ஸத்:

## BSYCHIC CURE—A TALE OF THE TIMES.

## ஆத்மவைத்தியம்—ஒரு உண்மையான கதை.

(*By Sri Balasundram.*)

"மந்திரமாவதுமா மருந்தாவதுந்
தந்திரமாவதுந் தானங்களாவதுஞ்
சுந்திரமாவதுந் தூய்நெறியாவது
மெந்தைபிரான் றனிணையடி தானே."
—திருமந்திரம்.

குப்பாசாஸ்திரிகள் கண்டதைக் காணக் கண்ணின்றி வெளிச்சத்தைக்கண்ட பெருச்சாளிபோல் மதிமயங்கிப் போதை தெளியாமல் ப்ரமித்து ஸ்தம்பித்திருந்தாரென்று சொன்னோம். மணி 12-ஆகவும் அவர் ஸ்வப்ரஜ்ஞை வந்து உச்சிநேரமாய்விட்டதே மாத்தியாந்நிகம் செய்யவேண்டாமாவென்று நினைத்து எழுந்துசென்று நித்தியக்கடனைச் செய்யத் துவக்கினர். அன்று அவர் மாத்யாந்நிகவந்தனம் செய்தது அவருக்கு ஒரு அதிசயமாயிருந்தது. மந்திரங்கள் வைகரி வாக்மட்டுமாகவிருந்து காதில்பட்டு மறையாமல் உற்பத்திஸ்தானம்வரையில் உள்ளிறங்கி புதைவாணம் மண்ணின்றுகிளம்பி விண்ணையளாவி படாரென்று வெடித்துப் புஷ்பமாரியாகவும், நக்ஷத்திரக் கூட்டங்களாகவும், பலவர்ண ஜோதிகளாகவும், இன்னும் பற்பல ரூபங்களாகவும் ஜோதிவிட்டொலித்து நள்ளிருளைப் பிரகாசிக்கச்செய்து நாட்டம்வைத்தோர் மனதைச் சந்தோஷிக்கச் செய்வதுபோல, அவர் உச்சரிக்கும் மந்திரங்கள் ஒவ்வொன்றும் பிரகாசரூபமாயிலங்கிக் தன் மனதைப் பிரகாசிக்கச்செய்வதைக் கண்டு அடுத்தடுத்ததிசயித்தார். "மந்திரதிர்ஷ்டா" என்று அவர் கேட்டிருந்த பதத்துக்கு உண்மையான அருத்தம் இன்னதென்று அவர் இப்பொழுதுதான் உணர்ந்தார். மந்திரதிர்ஷ்டாவாகிய ரிஷிகளின் பேரையும், மந்திரத்தின் அதிஷ்டான தேவதைகளின் பேரையும் ஏதோ மாமூல்படி பொட்டைப்பாடம் செய்து சொல்லியும் சொல்லிவைத்தும் வந்த குப்பாசாஸ்திரிகளுக்கு இப்பொழுது அந்த ரிஷிகளும் அதிஷ்டான தேவதைகளும் ஏதோ சங்கேத நாமங்களாகவின்றி, நிஜமான ரூபங்களாகவும், தன் தேகம், மனம் இவைகளைப்போல் அந்த ரூபங்களும் உண்மையாகவிருப்பதாகவும் உள்ளத்திலுணரத் தலைப்பட்டார். மாத்தியாந்நிகம்செய்து ஜபம் செய்யும்போது காயத்ரியாவாஹனம் செய்யும்பொழுது ஆகாசத்தில் ஏதோ மப்பு மந்தாரந்தோன்றி திடீரென எல்லாம் மாறி மறைந்து உள்ளத்தில் சொல்லமுடியாத ஒருவித பிரமை யுண்டுபண்ணச்செய்வதுபோல் தன்னுள்ளம் மாறக்கண்டார்.* அஷ்டோத்ரசத (108) காயத்ரீயும் முடிந்து உபஸ்தானமந்திரம் செய்யவேண்டியகாலத்தில் மந்திரம் பலித்து அஜபகாயத்ரியில் மனம் மூழ்கி (ஆசையின்றி மந்திரத்தில் திருஷ்டிலயிக்க அந்தர்த்தியானம் செய்யல்) காயத்ரீதரிசனம் கிடைக்கும் காலமாயிருந்ததால், அவருக்கு அப்பொழுது வழக்கம்போல் ஜபத்தை முடித்து உபஸ்தான மந்திரம்சொல்லி காயத்ரீதேவியை "யதாஸ்தானத்துக்கு" அனுப்ப மனந்துணியவில்லை. பழக்க வாசனை விசேஷத்தால்

* Comp. "Thou art gathered in a cloud,
Thou art wrapt as in a shroud,
And for ever thou must dwell
In the spirit of the spell."

"உத்தமேசிகரே தேவி" என்பார்; அந்த மந்திர திருஷ்டியில் மனம் லயித்து மேல்வார்த்தை யெழாமல் நின்றுவிடுவார். லயித்த மனம் மூளைத்ததும் உபஸ்தான மந்திரத்தைச் சொல்லிமுடிக்கக் கருதி "உத்தமேசிகரே தேவி பூமியாம் பர்வதமூர்த்தநி" யென்று சொல்வார்; உடனே மனம் லயித்துப்போம். இப்படிப் பலதடவை யத்தனித்துப் பலமுறையும் மந்திரத்தை முடிக்குமுன் மனம் லயித்துப்போக அப்படியே சுகித்திருந்துவிடுவார். மணி ஒன்றாயிற்று. ஒன்றரையாயிற்று. இரண்டும் அடித்துவிட்டது. சாஸ்திரிகள் ஜபம்செய்து முடிக்கவில்லையென்று ஜோதிமதி ஐயர் தம் குடும்பசகிதமாக இவர் வரவை எதிர்நோக்கி போஜனத்துக்குக் காத்திருக்கிறார். ஓதுமகிநாதன் ஜபத்திலிருக்து சாஸ்திரிகள் மனதைக் கிளப்பி, மணி இரண்டாயிற்றென்று சொல்லலாமென்று இரண்டொருதடவை உத்தேசித்தான். ஜோதிமதி ஐயர் அவனை முகஜாடை செய்து ஜபத்திலிருப்பவரைக் கலைக்கவேண்டாமென்று தடுக்கவும் அவன் இந்த வேடிக்கையை முற்றும் பார்ப்போமென்று சும்மாவிருந்துவிட்டான். குப்பாசாஸ்திரிகளோ மனம் லயித்து லயித்துக் கிளம்பினதில் கண்டதோர் சுகத்தையுணர்ந்து லயித்த மனத்தைக் கிளப்பாது அதில் தோன்றியதோர் சுகத்திலீடுபட்டு அப்படியே சிறிதுநேரம் மனம் கலையாது இருந்துவிட, தன் மனக்கண்முன் தோன்றிய ஜோதிரூபம், பஹிர்முகத்திலும் நிலவொளிபோல் மந்தஹாஸம் தவழ விளங்குவதைக் கண்டு, தேவியுருவமான அந்த ஜோதிஸ்வரூபத்தை இருந்த இடத்துக்கு அனுப்ப இஷ்டமில்லாமல், உபஸ்தான மந்திரத்தைச் சொல்லி முடிக்காமல், அந்த ஜோதிரூபத்தில் மனநாட்டம் நீங்காதவராயிருந்துகொண்டு ஜபத்தை ஒருவாறு முடித்ததாக பாவனைகாட்டிக்கொண்டு, ஆசமநீயம் செய்தார். ஜோதிமதி ஐயர் "இனி போஜனத்துக்கெழுந்திருக்கலாமே" யென்று சொன்ன வார்த்தை காதில்படவும் அவருக்கு ஸ்வப்பிரஜ்ஞையுண்டாகி, தானறியாமல் பொழுதுபோய்விட்டதை யுணர்ந்து "ஓஹோ, நாழி இருபதுக்கு மேலாய்விட்டதே. போஜனகாலம்கூடத் தப்பிவிட்டதே! என்னவோ உட்கார்ந்தேன்! பொழுதுபோனது தெரியாமற் போய்விட்டது!" என்று உபசார வார்த்தைகள் சொல்ல ஆரம்பித்தார். ஜோதிமதி ஐயர் அவர் வார்த்தையைத் தடுத்து எல்லாம் சுபிக்ஷமேயென்று சொல்லி போஜனத்துக்கழைக்க, சாஸ்திரிகள் போஜனத்துக்குச் சென்றார்.

போஜனம் செய்து முடிந்ததும் சாஸ்திரிகளுக்கு ஸ்வப்ரஜ்ஞை பூராகவந்து காயத்ரீதேவி தான் அனுப்பாமற்றானே யதாஸ்தானம் போய்விட்டாளென்று தெரிந்துகொண்டார். அப்பொழுது தாம்பூலம் கொடுத்து பசரித்துக்கொண்டிருந்த ஜோதிமதி ஐயரைப்பார்த்து "ஐயரவாள்! நானும் இந்த 30-வருஷகாலமாக சந்தியாவந்தன ஜபங்களை விடாமல் செய்துவந்திருக்கிறேன். இன்றைக்கு மாத்தியாந்நிக ஜபம் செய்ததுபோல் என்றைக்கும் செய்ததில்லை.

"உரையற்றுணர்வற்றுயிர்பரமற்றுத்
திரையற்ற நீர்போற் சிவமாதல்"—

என்று சொல்லக்கேட்ட திருமந்திர உபதேசத்தின் உண்மையை நான் இன்றுதான் உணர்ந்தேன். காயத்ரீ மந்திரத்தின் மஹிமையை இன்றுதான் உணர்ந்தேன்" என்று பிதற்ற ஆரம்பித்தார். ஜோதிமதி ஐயர், இச்சமயத்தில் அவர் வார்த்தையைத்தடுத்து "மேல்வைத்தவாறுசெய்யாவிடின் மேல்வினை "மால்வைத்த சிந்தையை மாயமதாக்கிடும்" —என்பதும் திருமந்திரோபதேசமேயென்றுமட்டும்சொல்லித் தாம்பூலம் தரிக்கலானார். குப்பாசாஸ்திரிகள் இதைக்கேட்டுச் சிந்தையிலாழ்ந்துவிட்டார். மேல்கேட்போமென்றாலோ, ஐயர் முகநாட்டம் வேறாகவிருக்கக்கண்டு கேட்கவும் துணியவில்லை. சும்மாவிருக்கவும் சாத்தியமில்லை. மனந்தடுமாற முன்னும் பின்னும் யோஜித்து ஒரு வழியிலும் தன்னுள்ளத்துண்டான சங்கடத்துக்குப் பரிகாரம் தோன்றாமல் உள்ளம் புழுங்கலானார். ஜோதிமதி ஐயர் பார்த்தும் பாராதவர் போலிருந்தார். கடைசியில் சாஸ்திரிகள்படும் உள்வேதனையைக் கண்டிரங்கி 'அவர் மனதை வேறு வழியில் மாற்றவேண்டு'மென்று வந்த காரியத்தைப்பற்றி விசாரிக்கலாமென வெண்ணி, லோகவியவகாரங்களைப்பற்றிப் பேசத்தொடங்கினார். சாஸ்திரிகள் முதலில் சரியாக அவர்கேட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லமுடியாமல் தடு

மாறினார். பிறகு சிறுகச் சிறு மனதைத் திடப்படுத்திக்கொண்டு, அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சரியாக பதில் சொல்லத் தொடங்கினார். இப்படிச் சிறிதுநேரம் பேசி அவர் மனப்போக்கை மாற்றி, உள்ளப்புழுக்கத்தை யாற்றவும், சாஸ்திரியார் எப்போதும் போலாகி, தான் வந்த காரியத்தைப் பற்றிப் பேசத்துவக்கினார். ஆனால் வந்தவுடன் பேசின முறுக்கு இல்லை. அவர் வந்த விஷயத்தில் அவருக்கிருந்த ஆத்திரமெல்லாம் ஆறிவிட்டது. ஆனால் கனம்பொருந்திய கனகசபேச ஐயர் சம்ஸாரத்தினிடத்தில் அவருக்குண்டான இரக்கமும் பச்சாதாபமும் மட்டும் மாறவில்லை. ஆதலால் இப்பொழுது தான்வந்த காரியத்தைப்பற்றிச் சொல்லும்பொழுது, தனது தந்திரோபாயங்களைப் பற்றியொன்றும் சொல்லாமல், அந்தம்மாள் படும் அவஸ்தையைப்பற்றி மட்டும், கேட்போர் மனமிரங்கக் கனிவுகூர்ந்து பேசி உண்மையை யுள்ளபடி யுரைத்தார். இப்பொழுது ஜோதிமதி ஐயர் அந்தம்மாளுடைய ஸ்திதியில் தான் மிகவும் சிரத்தையுற்றவர் போல் கேட்டதுமன்றி, இடையிடையே கேட்ட கேள்விகளினால், அவருடைய உபாதியின் காரணத்தையும் ஒருவாறு உள்ளத்தில் ஆராய்ந்து தேர்ந்துகொள்ள யத்தனித்தவர் போல் காட்டினார். குப்பா சாஸ்திரிகள் தன் சாமர்த்தியத்தைக் காட்டவேண்டுமென்கிற எண்ணமற்றுப் பேசினதினால், அவர் கேட்ட கேள்விகளுக்குச் சரியான பதில்வந்தது. சாஸ்திரிகள் சொல்லவேண்டியதை யெல்லாம் சொல்லி முடித்தபின் சிறிதுநேரம் ஜோதிமதி ஐயர் மௌனமாயிருந்து கடைசியில் திடீரென்று விழித்துக் கொண்டவர்போல் உள்ளத்திலேதோ உதித்ததைக்கண்டு, "சரி! நீங்கள் சொன்னதெல்லா முணர்ந்துகொண்டேன். அந்தம்மாளைப் படுத்துவது வியாதியல்ல; ஆதி யென்பார்களதை. நீங்கள் சீக்கிரம் திரும்பிப்போங்கள். நீங்கள் குறித்த கெடுவில் திரும்பிப் போகாவிட்டால் அந்தம்மாள் ஏக்கம்பிடித்து மாண்டுவிடுவாள். ஆகையால் நீங்கள் உடனேபோய், எல்லாவற்றிற்கும் வேங்கடாசலபதியிருக்கிறார், அவர் கிருபையிருந்தால் ஆகாததொன்றில்லை. அவர்மேல் பாரத்தைப் போட்டிருந்தால் எல்லாம் சுபமாக முடியுமென்று சொல்லுங்கள். திருவேங்கடத்தான் கிருபை எப்படியிருக்கிறதோ பார்ப்போம்? அவன்மேல் பாரத்தைப்போட்டு உண்மையாக அவனை நம்பியிருந்தால் திருவேங்கடதாசன் ஒருவனால் இந்த அம்மாளுடைய வியாதி முதலானதனைத்தும் சூரியனைக்கண்ட பனிபோல் பறந்துபோகிறதைப் பார்க்கலாமென்று சொல்லுங்கள். மேலே யேதும்சொல்ல இப்பொழுது சாத்தியமில்லையென்று முடித்தார்.

சாஸ்திரிகள்:—ஐயரவாள் பெரியமனது செய்து எனக்காக ஒருதரம் பட்டணம்வந்து அந்தம்மாளைப் பார்த்துவரல்வேண்டும். பிரயாணத்துக்குவேண்டிய ஆயத்தங்களெல்லாம் செய்யக் காத்துக்கொண்டிருக்கிறேன். இருந்து கூடவே யழைத்துக்கொண்டு போக வேண்டுமென்கிறஆஸ்தை நிரம்பவிருக்கிறது.

ஜோதிமதி ஐயர்:—உமக்கும் எனக்கும் ஆஸ்தையிருந்து என்ன செய்கிறது! அவாளவாள் வினை அவாளைக் காக்கவேண்டும். அல்லது திருவேங்கடத்தான் திருவருள் புரியவேண்டும். அவனுடைய அருளின்றி உம்மாலும் என்னாலும் வேறு எவராலும் ஒன்றும் ஆகாது. "அவனன்றி யோரணுவுமசையாது." அவன்மேல் பாரத்தைப்போட்டு அவனே சிந்தையாகவிருக்கச் சொல்லும். அவன் திருவுளம்பற்றி யாரை யனுப்புகிறானோ பார்ப்போம். நம்முடைய சங்கல்பம் ஒன்றும்பலிக்காது. நாமொன்று நினைத்தால் தெய்வமொன்று நினைக்கும். ஈசுவர சங்கற்பமெப்படியோ அதையறிந்து நடந்துகொண்டால் ஒரு குறையும் வராது.

"தான்முன்னஞ் செய்தவிதிவழிதானல்லால்
வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை"

—என்பது திருமந்திரோபதேசம். ஆகையால் எதையும் பதறாமல் சிதறாமல், ஈசனருளை முன்னிட்டுச் செய்தால் கைகூடிவரும். அதைவிட்டு நாமாக ஒருவழிபற்றிச் சென்றால் கர்மம் வளரும். தொந்தம்பற்றும். துன்பம் அணுகும். இன்பமும் ருசிக்காது. ஆகையால் நீர் உடனே புறப்பட்டுப்போம்—என்றார்.

குப்பா சாஸ்திரிகளும் பதில் சொல்ல வாயின்றி அவர் சொன்னதை யொப்புக்கொண்டவராய் மௌனம் சாதித்திருந்தார்.

(இன்னும் வரும்.)

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE.)

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*Rajanayaki.* (ஸ்ரீராஜநாயகி.)

## நாடகபாத்திரங்கள்.

### புருஷர்கள்.

விலேசவர்மன்—உதயபுரிராஜா.

ஹேமசந்திரஸிங்—விலேசவர்மாவின் தமையனாகிய இறந்துபோன ஹேமசந்திரவர்மாவின் குமாரன்—பட்டத்துக்கு இளவரசன்.

புலஸ்தியவர்மா—ராஜாவின் அந்தரங்க காரியதரிசி.

ஹரிச்ஜஸிங்—இளவரசனுடைய தோழன்.

லக்ஷ்மணஸிங்—புலஸ்தியவர்மாவின் குமாரன்.

வருணமித்திரன், கிருஷ்ணதாசன், உக்கிருத்திரப்பிரதாபன், கடோர்க்கஜசேனன், ஆலஹரிகன் } ஆலோசனை சபையோர்.

பிருகத்சேனன், மார்க்கசேனன் } சேனாஉத்தியோகஸ்தர்கள்.

வீரசேனன்—அரண்மனைக்காவல் சிப்பாய்.

பிரதாபஸிங்—ஜோதிபுரி ராஜ்யத்து இளவரசன்.

ராதாகிருஷ்ணன்—புலஸ்தியவர்மாவின் வேலைக்காரன்.

### ஸ்திரீகள்.

ஜோதிமஹால்—ஹேமசந்திரவர்மாவின் விதவை: ஹேமசந்திரஸிங்குக்குத் தாய்; தற்காலம் விலேசவர்மாவின் மனைவியாகிய இராணி.

உத்பலாக்ஷி—புலஸ்தியவர்மாவின் மகள்.

### இதரர்கள்.

புரோகிதர்கள், பிரபுக்கள், சேனாபதிகள், சிப்பாய்கள், நாடகக்காரர்கள், தூதர்கள், சேவகர்கள், தோட்டிகள், ராஜஸ்திரீகள் பெருமாட்டிகள், முதலியோர்கள்.

இறந்துபோன ஹேமசந்திரவர்மாவின் பிதிருதேவதை.

ஸ்தலம் { ராஜபுத்திர சமஸ்தானம். உதயபுரி பட்டணம்.

காலம்:—டில்லி சக்ரவர்த்திகளின் காலம்.

"The blessed gods in servile masks
Plied for me my household tasks."—*Emerson.*

"The World means intensely, and means good;
To find out its meaning is my meat and drink."
—*Robert Browning.*

"If you are in need of the fruit of my labour,
I am in greater need of the labour itself,
I perish of rust and rest."—*Emerson.*

### காக்ஷி 2.

{ இடம்:—அரண்மனையில் ஒரு அறை.
{ காலம்:—பகல்.

(ராஜா, ராணி, உக்கிருத்திரப்பிரதாபன், கடோர்க்கஜசேனன், சேவகர்கள், எல்லோரும் வருகிறார்கள்.)

ராஜா:—கடோர்க்கஜசேன, ருத்திரப்பிரதாப, உங்களுக்கு நம் சபையில் நல்வரவாயிருக்கட்டும். உங்களைப் பார்க்கவேண்டுமென்கிற ஆவல் நமக்கிருந்ததோடுங்கூட, உங்களுக்குக் கொஞ்சம் வேலையும் வைத்திருக்கிறோம்: நமது ஹேமசந்திரனைப்பற்றி நீங்களும் கேள்விப்பட்டிருப்பீர்களே! அவன் அந்தரங்கத்திலும் வெளிப்பார்வையிலும் வெகுதூரம் மாறுபட்டிருக்கிறான். தன் தகப்பனுடைய மரணத்தைத் தவிர வேறு எக்காரணத்தினால் இவன் இப்படித் தன்னிலை தப்பியிருக்கிறானென்று தெரியவில்லை. நீங்களிருவரும் குழந்தைப் பருவம்முதல் அவனோடு பழகி விளையாடி ஒரே கலாசாலையில் படித்துவந்திருப்பதனாலும் சற்றேறக்குறைய அவனுக்குச் சமவயதான வாலிபர்களாயிருப்பதனாலும், நீங்கள் நம் சபையிலேயே கொஞ்சநாளைக்கிருந்து அவனை உல்லாஸப்படுத்தி, வேடிக்கை விநோதங்களுக்கு அழைத்துப்போய் அவன் மனதை சந்தோஷிப்பித்து சிநேகபாவமாகப்பேசி அவன் மனதில் நாமறியாத விஷயம் ஏதாவது அவனைப் புண்ப

டுத்திக்கொண்டிருந்தால் அதைக் கூடியவரையில் கிரஹித்து நம்மிடத்தில் அறிவிப்பீர்களானால் அதற்குத் தகுந்த பரிகாரங்கள் செய்யலாமென்று உத்தேசித்திருக்கிறோம்.

ராணி :—பிரபுக்களே உங்களிருவரையும் பற்றி அவன் அடிக்கடி பேசியிருக்கிறான். அவன் உங்களிடத்திலிருப்பதைக்காட்டிலும் அதிக பிரியமாயிருக்கக்கூடிய இருவர்கள் உலகத்தில் வேறில்லை என்று நான் நிச்சயமாய்ச் சொல்லுவேன். ஆதலால் நீங்கள் நம்மிடத்தில் கொஞ்சம் தயவுசெய்து இங்கேயே வாசம்செய்து கூடியவரையில் அவனைத் திருத்திக்கொண்டு வருவீர்களானால் உங்கள் உபகாரத்தை என்றும் மறவாதபடி ஞாபகத்தில் வைத்துக்கொள்வோம்.

உக்கிர :—அவ்விடத்திய அபிப்பிராயப்படி நடந்துகொள்ளும்படி எங்களை ஆக்ஞாபிக்கக்கூடிய அதிகாரம் அவ்விடத்தில் குடிகொண்டிருக்க எங்களைப் பிரார்த்திப்பதேன்?

கடோர்க்க :—இருந்தாலும் இப்பொழுதே நாங்களிருவரும் எங்கள் அற்ப ஊழியத்தை அத்திருவடிகளில் சமர்ப்பித்து அவ்விடத்திய ஆக்ஞைகளைச் சிரமேல்வகிக்கக் காத்திருக்கிறோம்.

ராஜா :—உங்களுக்கு வெகு வந்தனம்!

ராணி :—வெகு வந்தனங்களையா உங்களிருவருக்கும்! தயவுசெய்து இப்பொழுதே போய் என் மகனைப் பாருங்கள்! அடே சேவகர்காள், யாராவது இருவர் இந்தப் பிரபுக்களை ஹேமசந்திரனிருக்கும் அறைக்கு அழைத்துப்போங்கள்.

கடோர்க்க :—நாங்கள் வந்த முகூர்த்தம் விண்போகாமல் யுவராஜா அவர்களுடைய மனது திருந்தும்படி கடவுள் அனுக்கிரஹிப்பாராக!

ராணி :—அதுவேதான் நம்முடைய பிரார்த்தனையும்!

(கடோர்க்கஜசேனன், உக்கிரருத்திரப்பிரதாபன், சேவகர்கள் எல்லோரும் போய்விடுகிறார்கள்)

(புலஸ்தியவர்மா வருகிறான்)

புலஸ்தி :—ஜோதிபுரிக்குச் சென்ற தூதர்கள் நல்ல சமாசாரத்துடன் திரும்பிவருகிறார்கள்.

ராஜா :—நீர்தான் நமக்கெப்பொழுதும் நல்ல சமாசாரக் களஞ்சியமாய் விளங்குகிறீர்.

புலஸ்தி :—தாங்கள் அப்படி நினைக்கிறீர்களா? எனக்குமட்டும் நான் கடவுளுக்கும் ராஜாங்கத்துக்கும் செய்யவேண்டிய கடமைகளைச் செய்கிறதாகத் தோற்றுகிறதேயொழிய வேறொன்றுமேற்படவில்லை. அப்படியானால் இன்னொரு நல்ல சமாசாரமும் சொல்லுகிறேன் கேளுங்கள். யுவராஜா அவர்கள் மனந்தடுமாறியிருப்பதற்குக் காரணமும் கண்டுபிடித்துவிட்டேனென்று நினைக்கிறேன்: இது விஷயத்தில் நான் உத்தேசிக்கிறது உண்மையாயிராவிட்டால் என் புத்தி மழுங்கிக் காரணகாரியங்களை ஊஹிக்கிற சக்தி குன்றிப்போய்விட்டது என்று ஒப்புக்கொள்ளவேண்டியதுதான்.

ராஜா :—அதைச் சொல்லுங்களையா, அதைத்தான் கேட்கவிரும்புகிறேன்.

புலஸ்தி :—வந்திருக்கிற தூதர்களை அழைத்து அவர்களுக்கு தரிசனம் கொடுத்து அவர்கள் சமாசாரத்தைக் கேட்பதனாலுண்டாகும் ஆனந்தமாகிய விருந்துண்டபின் நான் யுவராஜாவைப்பற்றிச் சொல்லப்போகிற விஷயம் பழவர்க்கமாகப் புசிக்கப்படட்டும்.

ராஜா :—நீரே போய் அவர்களை அழைத்துவாரும் (புலஸ்தியவர்மா போகிறான்) அவர் சொல்லுகிறதைக் கேட்டாயா, ஜோதி! உன் மகனுடைய மனவருத்தத்தின் காரணத்தைக் கண்டுபிடித்துவிட்டதாகச் சொல்லுகிறார்.

ராணி :—அவனுக்கு வேறொன்றுமில்லை: அவன் தகப்பனாருடைய மரணமும் நாம் கொஞ்சம் அவசரப்பட்டு விவாகம் செய்துகொண்டதும் தான் அவன் மனதைக் கொஞ்சம் புண்படுத்திவிட்டது.

ராஜா :—நல்லது இவர் என்னசொல்லுகிறார் பார்ப்போம்.

(வருணமிசிரீன் கிருஷ்ணதாஸன் இவர்களோடு, புலஸ்தியவர்மா திரும்பி வருகிறான்)

வாருங்களேயீர் நண்பர்காள்!-வருணமிசிர, ஜோதிபுரி ராஜா என்னசொல்லுகிறார்.?

வருணமிசி:—வெகு ஆதரவுடன் இவ்விடத்திய க்ஷேமங்களை விசாரித்து, நாங்கள் வந்த விஷயத்தை அறிந்ததும் உடனே தன் மருமகனாகிய பிரதாபசிங்கை இதற்குமேல் சேனைகள் சேர்க்கக்கூடாதென்று தடுத்து அவனைத் தன் முன் கொண்டுவந்து நிறுத்தும்படி ஆக்ஞாபித்தார். தனக்கு வயதாகிவிட்டபடியாலும் தான் வியாதியினால் படுக்கும்படி நேர்ந்ததனாலும் தன்னை அந்தச் சிறுவன் அசட்டைசெய்து சுவயாதிகாரத்தோடு காரியங்கள் நடத்த ஆரம்பித்ததற்காக வருத்தப்பட்டுக்கொண்டார். அவர் உத்திரவுப்படி மருமகனைத் தன்னெதிரில் அழைத்துவந்ததும் அவனை நன்றாய்க் கண்டித்துப் புத்திமதிசொல்லித் தங்களுக்கு விரோதமாக யாதொரு பிரயத்தனமும் செய்கிறதில்லை என்று உறுதிமொழி கூறச்சொன்னார். அவனும் அப்படியே ஒப்புக்கொண்டதன் பேரில் மிகசந்தோஷமடைந்து அவனுக்கு வருஷத்தில் மூவாயிரம் ரூபாய்கள் செலவுக்குக் கொடுக்கும்படி கஜானாவுக்கு உத்திரவு கொடுத்தார். இதுவரையில் அவன் சேகரித்த சைனியத்தைத் தங்களுக்கு விரோதியாகிய ஆஜ்மீர் அரசன்மேல் செலுத்தும்படி ஆக்ஞாபித்து அவனுக்கும் அவன் சைனியத்துக்கும் தங்கள் நாடுகள் வழியாய்த் தடையின்றி செல்ல உத்திரவுகொடுக்கும்படி இதோ இக்கடிதத்தில் எழுதிக் கேட்டுக்கொள்ளுகிறார் (என்று ஒரு கடிதத்தை நீட்டுகிறான்) அதற்கு வேண்டிய நிபந்தனைகளும் அதிலேயே காணப்பட்டிருக்கின்றன.

ராணா:—நமக்கு அதிக திருப்தியாயிற்று! இக்கடிதத்தைப் பின்னிட்டு சாவகாசமாகப் படித்துப்பார்த்து யோசித்து பதில் எழுதுவோம். உங்கள் சிரமத்துக்கு மிகவும் வந்தனமளிக்கிறோம். இப்பொழுது நீங்கள் போய் சிரமபரிகாரம் செய்துகொள்ளுங்கள்! இன்றிரவு நம்மோடு போஜனம்செய்ய வாருங்கள்!

(வருணமிசிரனும் கிருஷ்ணதாஸனும் போகிறார்கள்.)

புலஸ்திய:—இந்த விஷயம் க்ஷேமமாய் முடிந்துவிட்டது மகாராஜ்! இதற்குமேல் ராஜாங்கமென்றால் என்ன, அதற்குரிய கடமைகள் யாவை, என்றும், பகல் எப்படி உண்டாயிற்று; இரவில் ஏன் இருட்டாயிருக்கிறது! பொழுது எப்படிப் போகிறது என்றும் விசாரிக்கப் புகுந்தால் பகலிரவு எல்லாப்பொழுதும் வியர்த்தமாய்ப் போய்விடுமாதலாலும் எதையும் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தலே புத்திசாலிகளுக்கு லக்ஷணமானதாலும் நான் சுருக்கிச் சொல்லுகிறேன்: யுவராஜாவாகிய உங்கள் திருமகனுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது. அதற்குமேல் இன்னதென்று சொல்லமுடியாது. ஏனெனில் பைத்தியம் என்பது என்னவென்று கேட்டால் பைத்தியக்காரனைக் காட்டவேண்டுமேயல்லாது வேறுவிதமாய் எப்படிச் சொல்லுகிறது! அது போகட்டும். உள்ளசங்கதியைச் சொல்லிவிட்டேன்.

ராணி:—என்ன ஐயா, ஊரெல்லாம் சுற்றுகிறீர், ஒன்றும் ஏற்படவில்லையே! இவ்வளவு அலங்காரப் பிரயோகங்கள் இல்லாமல் பேசமுடியாதா?

புலஸ்தி:—அம்மணி, நான் அப்படி ஒன்றும் அதிகமாக அலங்காரங்கள் உபயோகிக்கவில்லையே. அவருக்குப் பைத்தியம் என்பது உண்மை; அது உண்மையாயிருப்பது பரிதாபமான விஷயம்; அது பரிதாபமான விஷயம் என்பதும் உண்மையே. நல்லது இந்த அஸந்தர்பமான அலங்காரத்தை விட்டுவிட்டுப் பேசுவோம். அவருக்குப் பைத்தியம்பிடித்திருப்பது நிச்சயம். இனி இந்தப் பைத்தியமென்னுங் குறைக்குக் காரணம் தேடவேண்டும். ஏனெனில் நிறைவான காரணமில்லாமல் குறைவான காரியம் உண்டாகாது. அதையும் சொல்லுகிறேன் கேளுங்கள்: என்னுடைய மகளொருத்தியிருக்கிறாள்—எனக்குக் கீழ்படிந்து நடக்கிறவரையில் என் மகள்தான், அப்புறம் எப்படியோ—அவள் என் கடமையையுணர்ந்து என் உத்திரவுப்படி இதோ இக்கடிதத்தை என்னிடம் கொடுத்தாள். இதைப் படிக்கிறேன், மேல் நீங்களே அறிந்துகொள்ளுவீர்கள்: (என்று படிக்கிறான்) "சுவாதி நக்ஷத்திரத்தைப்போல் பரிசுத்தமாய் சாந்திஸ்வரூபமாய் என் இருதயத்தில் விளங்கும் இஷ்டதேவதைக்கு—அதாவது—அழகிலுதித்த பவழக்கொடியாகிய உத்பலாக்ஷிக்கு" (படிப்பதை நிறுத்திவிட்டு) கெட்டுப்போச்சுது காரியம்! 'அதா

வது' என்கிறபதம் அழகைக் கெடுத்துவிட்டது. 'அதாவது' என்கிற பதமே உபயோகிக்காமல் எழுதினால்தான் வாக்சாதுரியம்! அது போகட்டும்: (மேலே படிக்கிறான்) "இவ்வார்த்தைகளுக்கு அவள் மனதில் ஒரு மூலையில் தயவு கூர்ந்து இடங்கொடுப்பாளாக:"

ராணி:—இது ஹேமசந்திரன் அவளுக்கு எழுதினதா?

புலஸ்தி:—ஆம், மேலேகேளுங்கள் (என்றுபடிக்கிறான்.)

"சத்தியமாகவேயீரேழுலகுந்தலைகீழானாலும் (இந்த)
சந்திரசூரியர்கள்தெற்குவடக்காய்த்தவறிப்போனாலும் (இந்த)
ஹேமசந்திரன் சொல்தவறிப்போமென்றுநினை
[யாதேமாதே, கனவிலும் நினையாதே.

என்னன்பிற்கினிய உத்பலாக்ஷி! இது உனக்குத்தகுமா? குருடனை ராஜபார்வை எப்படியிருக்குமென்று கேட்பதுபோல் என்னைக் கவிகள் எழுதும்படி தூண்டுகிறாயே! எனக்கென்ன இசைஞானமிருக்கிறதா? என்னுடையதுக்கத்தைப் பாட்டிலமைக்க எனக்கு சக்தியில்லை. அழுகிறவனைப்பார்த்து "சுருதியம்தவறாமல் அழவேண்டுமெ"ன்றால் எப்படிமுடியும்? ஆனால் ஒன்று மட்டும் என்னால் முடியும் இந்த உடல்தரித்திருக்கும் வரை உன்னைத் தவிரவேறு ஒரு உருவத்தையும் நினையேன்.

இப்படிக்கு
உன்னன்பிலீடுபட்ட
ஹேமசந்திரன்.

(படிப்பதை நிறுத்திவிட்டு) இக்கடிதத்தை ஒளிக்காமல் என் உத்திரவுப்படி என்மகள் என்னிடம் கொடுத்து விட்டாள். இன்னும் அடிக்கடி அப்பொழுதப்பொழுது பேச்சு மூலமாயும் எழுத்து மூலமாயும் நடந்ததையெல்லாம் சொல்லியிருக்கிறாள்.

ராணா:—இவள் பதிலுக்கு அவனிடத்தில் எப்படி அந்தரங்கத்தில் அபிப்பிராயப்படுகிறாள்?

புலஸ்தி:—என்னைத் தாங்கள் எப்படி மதிக்கிறீர்கள்?

ராணா:—ராஜாங்கத்துக்கு உண்மையாயுழைக்கும் உத்தமர்களிலொருவராக பாவிக்கிறோம்.

புலஸ்தி:—நானும் அப்படிப்' பெயரெடுக்க வேண்டுமென்று தான் முயற்சிக்கிறேன்—நான் இவர்களிருவருக்கும் பரஸ்பரமாயுள்ள மனோபாவத்தை அறிந்தும்—என்மகள் தானாக இதைப்பற்றிச் சொல்லுமுன் நானாகவே அறிந்துகொண்டேன். அறிந்துகொண்டபிறகு குட்டிச்சுவர்போல் சும்மாயிருந்து நான் இதை கவனிக்காததுபோல் ஜாடையாய் விட்டுவிட்டால் அப்புறம் நாளைக்குத் தாங்கள் என்ன நினைப்பீர்கள்? அப்படிச்செய்வது எனக்கழகாகுமா? நான் உடனே குட்டியைக் கூப்பிட்டு கண்டிப்பாய்ச் சொன்னேன. "ஹேமசந்திரஸிங் அவர்கள் இளவரசர் - நாளைக்கு உனக்கும் எனக்கும் அரசனாய் விளங்கப் போகிறவர் - நமதந்தஸ்துக்கு எவ்வளவோ மேற்பட்டவர் —ஆதலால் நீ அவரோடு அதிக பழக்கம் வைத்துக்கொள்வது சரியல்ல" என்றேன். அவர் இவளை எப்பொழுதாவது காணவந்தால் தன்னைப்பார்க்க சரிப்படாது என்று சொல்லிவிடும்படி கட்டளையிட்டேன். அவர் கடிதங்கள் கொடுத்தனுப்பினால் வாங்கிக் கொள்ளக் கூடாதென்று திருப்பிவிடச்செய்தேன்—முடிவில் நான் சொல்லியபடி என் மகள் நடந்துவரவே இவள் தன்னை அசட்டைசெய்துவிட்டதுபற்றி யுவராஜா அவர்கள் துக்கப்பட்டு, துக்கத்திலிருந்து விசாரத்தில் மூழ்கி, விசாரத்தினால் தூக்கங்கெட்டுக் கடைசியில் இப்பொழுது பைத்தியம்பிடித்து நம்முடைய துக்கத்துக்குக் காரணமாயிருக்கிறார்.

ராணா:—இதுதான் உள்ள சமாசாரமென்று நினைக்கிறீரா?

ராணி:—அநேகமாய் அப்படித் தானிருக்கும் என்று தோற்றுகிறது.

புலஸ்தி:—சுவாமி, எப்பொழுதாவது எந்தவிஷயத்திலாவது நான் "இது இப்படித்தான்" என்று தைரியமாய்ச் சொல்லிப் பிறகு அந்த விஷயம் வேறுவிதமாயிருந்ததுண்டா? தயவுசெய்து சொல்லுங்கள்.

ராணா:—எனக்குத் தெரிந்தவரை அப்படிக் காணோம்.

புலஸ்தி:—இது நான் சொல்லுகிறபடியில்லாமற் போனால் இந்தத் தலையை இந்தக் கழுத்திலிருந்து எடுத்து விடுங்கள்—எனக்குக் கொஞ்சம் புலனகப்பட்டுவிட்டால்,

அது எந்த மூலையில் பதுங்கியிருந்தாலும் உண்மையைக் கண்டுபிடித்து விடுவேன்.

ராஜு :—இதை இன்னும் எப்படி நிச்சயப்படுத்திக் கொள்ளலாம்?

புலஸ்தி :—அவர் அடிக்கடி இந்தக் கூடத்தில் உலாவுகிறதுண்டென்று தங்களுக்குத் தெரியுமே!

ராணி :—ஆம் நானும் பார்த்திருக்கிறேன்.

புலஸ்தி :—அந்த சமயத்தில் என் மகளை அவர் சந்திக்கும்படி செய்கிறேன். நாமிருவரும் ஒரு திரைக்குப் பின்னொளிந்திருப்போம்—அப்பொழுது அவர்களிருவருக்கும் நடக்கும் சம்பாஷணையைத் தாங்கள் உற்றுக் கேட்டு நான் சொல்வது உண்மையென்று நம்பாவிட்டால் நான் உத்தியோகத்தைவிட்டு விட்டு நாளையதினமே ஜட்காவண்டி ஓட்டும் தொழிலுக்குப் போகிறேன்.

ராஜு :—அப்படியே ஆகட்டும்.

ராணி :—அதோ பாருங்கள் - அந்தப்பைத்தியம் என்னவோ படித்துக்கொண்டு வருகிறது—அவனைப்பார்க்கப் பரிதாபமாயிருக்கிறது.

புலஸ்தி :—தாங்களிருவரும் அப்புறம் போங்கள்—நான் அவரோடு சற்றுப் பேச்சுக் கொடுக்கிறேன்.

(ராஜுவும் ராணியும் சேவகர்களும் போய் விடுகிறார்கள்)

(ஹேமசந்திரலிங் படித்துக்கொண்டு வருகிறான்)

யுவராஜா அவர்களுக்கு மங்களமுண்டாகுக! க்ஷேமமா?

ஹேமசந்தி :—ஏதோ இருக்கிறேன், கடவுள் கிருபையில்!

புலஸ்தி :—நான் யாரென்று தெரிகிறதா, சுவாமி?

ஹேமசந்தி :—தெரியாமலென்ன? நீ புலையனல்லவா?

புலஸ்தி :—அல்ல சுவாமி!

ஹேமசந்தி :—அவ்வளவு யோக்யனாக இருக்க உனக்கிஷ்டமில்லையா?

புலஸ்தி :—நானென்ன அயோக்கியனா?

ஹேமசந்தி :—உலகத்தில் பதினாயிரத்திலொருவனைப் பொறுக்கியெடுத்து யோக்கியனென்று சொல்ல முடியவில்லை—என்னைப்போலொரு பைத்தியக்காரன் பகலில் விளக்கெடுத்துக்கொண்டு யோக்கியனைத் தேடிச் சென்றான்.

புலஸ்தி :—அது வாஸ்தவந்தான்! நானும் அவனைப்பற்றிப் படித்திருக்கிறேன்.

ஹேமசந் :—ஏனெனில் சூரியனைக்கூட நம்பக்கூடவில்லை. அவன் தேவதையாயிருந்தும் நாற்றமெடுத்த புலாலை முத்தமிட்டு அதில் கிருமிகளை உண்டுபண்ணுவானானால் உன் மகளைப்போலொத்த அழகிய உருவத்தை—உனக்கு மகளிருக்கிறாளா?

புலஸ்தி :—இருக்கிறாள், சுவாமி!

ஹேமசந் :—அவளை வெளிச்சத்தில் போகச்சொல்லாதே—மக்கட் பேற்றிற் பெறும் பேறில்லை என்றாலும் என்னைப்போலொத்த மக்களைப் பெறுவதைக்காட்டிலும் பெறாதிருக்கலாம்—ஆதலால் உன்மகளை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்.

புலஸ்தி :—(தனக்குள்) இப்பொழுதுதான் அவருக்கு என்னை இன்னாரென்று தெரிந்தது என் மகள் ஞாபகம் இன்னுமிருக்கிறதா! முதலில் என்னைப் புலையன் என்றார். அவருடைய புத்தி வெகுதூரம் மாறுபட்டிருக்கிறது. இவர் வயதில் நானும் இதற்கு மேல் அவஸ்தைப் பட்டேன்—மறுபடியும் பேச்சுக் கொடுக்கிறேன். (உரக்க) என்ன படிக்கிறீர்கள் சுவாமி?

ஹேமசந்:—புஸ்தகந்தான், புஸ்தகந்தான்.

புலஸ்தி :—என்ன விஷயம்?

ஹேமசந் :—யாருக்கும் யாருக்கும் என்ன விஷயம்?

புலஸ்தி :—தாங்கள் படிக்கிற விஷயம் என்ன என்று கேட்டேன்.

ஹேமசந் :—இதுவா! இது "சுத்த அக்கப்போர்" என்று பெயர்—இதை எழுதினவன் பெரிய போக்கிரிப்பயல் - கிழவர்களுக்கு தாடி நரைத்திருக்கும் என்றும் - முகமெல்லாம் எருக்கங் காய்போல் சுருக்கங்களிருக்குமென்றும் நடக்கும்பொழுது கால்கள் ஒன்றுக்கொன்று இடறிக் கொண்டிருக்குமென்றும் கண்களின் பார்வையும் புத்தியின் பார்வையும் சமீப வஸ்துக்களை சிரமமில்லாமல் பார்க்குமென்றும் எழுதுகிறான்—இதே

ல்லாம் நான் உண்மையென்று நம்பினாலும் இவைகளை புஸ்தகத்தில் எழுதுவது பெரியவர்களை அவமதிப்பதாகும் - ஏனெனில்காலம் திரும்பிச் செல்லுமாயின் நீரும் என்னவ்வளவு வயதானவனாகி விடுவீர்—அப்பொழுது இது உம்மைப் பழிப்பதுபோலாகும்.

புலஸ்தி:—(தனக்குள்) பைத்தியமாயிருந்தாலும் இவரும் ஒரு யுக்தியோடுதான் பேசுகிறார். (உரக்க) ஏன் இளைத்திருக்கிறீர்கள்? திரவியத்தைப்போல் தேகத்தைக் காப்பாற்றவேண்டாமா?

ஹேமசந்:—ஆம் அப்பொழுதே குழி வெட்டிப் புதைத்திருக்கவேண்டும்.

புலஸ்தி:—திரவியத்தைப் புதைத்துத்தான் வைக்கிறார்கள்! (தனக்குள்) சில சமயங்களில் எப்படி ஆணி அடித்தாற்போல் பேசுகிறார்! நம்மைக்காட்டிலும் பைத்தியங்களுக்குச் சிலசமயங்களில் புத்தி அதிக தீக்ஷண்யமாயிருக்கும்போலிருக்கிறது. இப்பொழுது இவரை விட்டுவிட்டு உடனே என் மகளை இவ்விடம் அனுப்புகிறேன்—இருவருக்கும் நடக்கும் சம்பாஷணையை ஒட்டுக் கேட்டால் உண்மை வெளிப்படும்—(உரக்க) —தாங்கள் எனக்கு உத்திரவு கொடுக்கிறீர்களா?

ஹேமசந்:—அப்படியே! என் உயிரைத் தவிர வேறொன்றையும் இவ்வளவு மனப்பூர்வமாய் கொடுக்கமாட்டேன்—உமக்கு உத்திரவு கொடுப்பதைப்போல் அவ்வளவு முழுமனதோடு வேறொன்றையும் கொடுக்கமாட்டேன் —கொடுக்கமாட்டேன் கொடுக்கவே மாட்டேன்.

புலஸ்தி:—வந்தனம் சுவாமி: (திரும்பிப் போகிறான்.)

ஹேமசந்:—கிழக் கோட்டான்! தொலைந்து போ!

(உக்கிருருத்திரப்பிரதாபனும் கடோர்க்கஜசேனனும் வருகிறார்கள்.)

புலஸ்தி:—நீங்களிருவரும் யுவராஜா வைத்தானே தேடுகிறீர்கள்? அவர் அதோ இருக்கிறார் - போங்கள்.

உக்கிர:—(புலஸ்தியவர்மாவுக்கு) வந்தனமையா. (எல்லோரும் போய்விடுகிறார்கள்)

(ஹேமசந்திரஸிங், உக்கிருருத்திரப்பிரதாபன், கடோர்க்கஜசேனன் மூவரும் வருகிறார்கள்)

## காக்ஷி 3.

{ இடம்:—அரண்மனையில் ஒரு அறை.
{ காலம்:—பிற்பகல்.

கடோர்க்க:—யுவராஜா அவர்களுக்கு அனேக நமஸ்காரம்.

உக்கிர:—அவ்விடத்துக்கு அந்த நமஸ்காரம்.

ஹேமசந்:—வாருங்களையா தோழர்களே! உங்களிருவருக்கும் ரொம்ப வந்தனம்! சௌக்கியந்தானா?

உக்கிர:—உலகத்துக்குள்ளபடி எங்களுக்கும் நடந்து வருகிறது.

கடோர்க்க:—அதிர்ஷ்டம் எங்களை தலையில் தூக்கிக்கொண்டு கூத்தாடாமலிருப்பதே பெரிய அதிர்ஷ்டம். ஏனெனில் என்றைக்காவது அதன் தலையிலிருந்து தவறி விழுந்தால் எங்கள் தலைபோய் விடும்.

ஹேமசந்:—ஆனால் அதன் காலின்கீழ் மிதிபடுகிறீர்களா?

உக்கிர:—அப்படியுமில்லை.

ஹேமசந்:—அப்படியானால் அதிர்ஷ்ட தேவதையின் மத்தியபாகத்தில் வசிக்கிறீர்களா?

கடோர்க்க:—அப்படித்தான். அவள் எங்களை இன்னும் பகிரங்கப்படுத்தாமல் ரகஸியத்திலேயே தான் வைத்திருக்கிறாள்.

ஹேமசந்:—அவள் ஒருநாளிருந்த இடத்தில் ஒரு நாளிருக்கமாட்டாள். அவள் செய்தி தெரியுமே! வேறென்ன விசேஷம்?

உக்கிர:—ஒன்றும் விசேஷமில்லை. உலகம் இப்பொழுது யோக்கியமாய் நடந்துவருகிறது என்பது தான் விசேஷம்.

ஹேமசந்:—அப்படியானால் யுகப்பிரளயம் சமீபித்துவிட்டதுபோலும்! நீர் சொல்லுகிறது. நம்பக்கூடியதாயில்லையே! உலகமெல்லாம் யோக்கியமாயிருந்தால் நீங்கள் ஏன் இந்த சிறைச்சாலைக்கு வருகிறீர்கள்?

கடோர்க்க:—சிறைச்சாலையா!

ஹேமசந்:—ஆம்! உதயபுரி ஒரு சிறைச்சாலையல்லவா?

உக்கிர:—அப்படியானால் உலகமுழுவதுமே ஒரு சிறைச்சாலைதான்.

ஹேமசந்:—ஆம். அதில் அநேக குகைகளும் இருட்டறைகளும் இருக்கின்றன. அவையெல்லாவற்றிலும் இந்த உதயபுரிதான் மகா பயங்கரமான குகை.

உக்கிர:—நாங்கள் அப்படி நினைக்கவில்லையே! மகாராஜ!

ஹேமசந்:—நீங்கள் அப்படி நினைக்காவிட்டால் உங்களுக்கு இது சிறைச்சாலையுமல்ல. நாம் எப்படி நினைக்கிறோமோ அப்படித்தான் உலகமுமிருக்கிறது. நல்லது என்று நினைத்தால் நல்லதுதான். கெட்டது என்று நினைத்தால் கெட்டதுதான். ஆனால் எனக்குமாத்திரம் இது சிறைச்சாலையாகத்தான் தோற்றுகிறது.

உக்கிர :—தங்களுடைய பெரிய மனதுக்கு இந்தச் சிறிய ராஜ்யம் போதவில்லை. ஆதலால்தான் சிறைச்சாலையாகத் தோற்றுகிறது.

ஹேமசந் :—அப்படியல்ல. என்னை ஒரு குடுக்கைக்குள்ளடைத்து: "இதுதான் உன் ராஜ்யம். இதைவிட்டு வெளியே வரக்கூடாது" என்றாலும் எனக்கு சம்மதம்தான். என் மனதுமட்டும் வீண் கனவுகள் கண்டு உதைத்துத் துள்ளிக்கொண்டிராமல் அடங்கியிருந்தால் நான் எவ்வளவோ சந்தோஷமாயிருப்பேன்.

கடோர்க்க :—இன்னும் விசாலமான ராஜ்யங்களை சம்பாதிக்கவேண்டுமென்கிற ஆசைதான் அந்தக் கனவு. அதற்காகத்தான் துள்ளுகிறது மனது! அதன் ஆசைகளெல்லாம் கனவேயொழிய வேறில்லை.

ஹேமசந் :—சனவென்பது பொய்யாயிற்றே!

கடோர்க்க :—ஆசைகளும் ஆசைப் பொருள்களும் பொய்தான். இவையெல்லாம் மாயையின் செயல்களல்லவோ!

ஹேமசந் :—ஆனால் இந்த ஆசையென்னும் பொய்யிலகப்படாத மண்ணும் கல்லும் நம்மைவிட மேலான பொருள்கள்தான். அதிருக்கட்டும் இந்தப் பரிபாஷை எனக்குப் பேசத்தெரியவில்லை. என்னை மன்னிக்கவேண்டும். உங்களோடு பேசுகிறதற்கு வேண்டுமானால் வேதாந்த சாஸ்திரிகளை வரவழைக்கிறேன்.

உக்கிர :—
கடோர்க்க :— } வேண்டாம் சுவாமி, தங்கள் உத்திரவுப்படி நடக்க காத்திருக்கிறோம்.

ஹேமசந் :—என்னுத்திரவுப்படி நடக்க ஏற்கனவே இங்கே அநேக சேவகர்கள் என்னைச் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள். என்னை இமை கொட்டாது பார்த்துக்கொள்வார்கள். நீங்கள் எனக்கு பாலியசிநேகிதர்களானபடியால் ஒளியாமற் சொல்லுங்கள் :—இங்கே வந்த காரியமென்ன?

கடோர்க்க :—ஒன்றுமில்லை தங்களைப் பார்த்துவிட்டுப்போகத்தான் வந்தோம்.

ஹேமசந் :—அதற்காக வந்தனம். என் தரித்திரபுத்திக்கு வந்தனங்கூட ஏகவசனமாகத்தான் வருகிறது. வாய்நிறைய வந்தனங்கள் என்று சொல்லக்கூடாதா? மானஸிக பூஜையில்கூட பாதித்தேங்காய்தான் நைவேத்தியம் செய்தானாம் ஒரு சோமூட்டி! அதுபோலிருக்கிறது. என்னை நன்றாய்ப் பார்த்தாகிவிட்டதல்லவோ? இனி போகலாமே! ஆனால் உங்களை யாரும் இங்கே அனுப்பவில்லையா? நீங்களாகவா வந்தீர்கள்? உண்மையைச் சொல்லுங்கள்—சீக்கிரம் சொல்லுங்கள்.

கடோர்க்க :—என்ன சொல்லவேண்டும் மகாராஜ!

ஹேமசந் :—ஏதாவது சொல்லுங்கள் நான் கேட்டதற்குப் பதிலாக! நீங்கள் என்னிடம் பிறரால் அனுப்பபட்டிருக்கிறீர்களென்று உங்கள் முகமே சொல்லுகிறதே. நீங்கள் சாதுக்களானபடியால் உங்கள் முகம் பொய் சொல்லாது. ராஜா அவர்களும் ராணியாரும் உங்களை இங்கே வரவழைத்து என்னிடம் அனுப்பியிருக்கிறார்களென்று நன்றாய்த் தெரிகிறது.

உக்கிர :—எங்களை ஏன் வரவழைக்கவேண்டும் சுவாமி?

ஹேமசந் :—எனக்குப் புத்தி புகட்டுகிறதற்குத்தான். இப்பொழுது நம்முடைய சிநேகத்தின்பேரிலும் உங்களுடைய யௌவனத்தின்பேரிலும் நம்முடைய நீடித்த பழக்கத்தின்பேரிலும் சத்தியமாய்ச் சொல்லுங்கள், நீங்கள் இந்த ஊருக்கு வரவழைக்கப்பட்டீர்களா இல்லையா?

உக்கிர :—(கடோர்க்கனைப் பார்த்து) என்ன சொல்லலாம்?

ஹேமசந் :—(தனக்குள்) அப்படியா? எனக்கும் தெரியும் நானும் பார்த்துக்கொள்ளுகிறேன் (உரக்க) உண்மையைச் சொல்ல யோசனையென்ன?

கடோர்க்க :—சுவாமி! ராஜா அவர்கள் எங்களை வரவழைத்தூ வாஸ்தவந்தான்.

ஹேமசந் :—ஏன் வரவழைத்தாரென்று சொல்லட்டுமா? நீங்கள் சொல்லுவதற்குமுன் நான் சொல்லிவிட்டால் ராஜா அவர்கள் உங்களிடம் ஒப்புவித்த ரகஸியத்தை உங்கள் வாயால் வெளியிட்டார்கள் என்கிற பெயர் வராது. கேளுங்கள் :—இப்பொழுது கொஞ்சகாலமாக, என்னகாரணத்தினாலோ தெரியவில்லை, என் மனதிற்கு சந்துஷ்டியில்லை. தேகப்பயிற்சிகளையெல்லாம் விட்டுவிட்டேன், ஒன்றும் பிடிக்கவில்லை. கண்குளிரப் பசுமைநிறைந்த இந்தப் பூமியைப் பார்த்தால் சுடுகாடுபோல் விளங்குகிறது! இந்த அழகிய நீலப்படுதாவினால் அமைக்கப்பட்டு நவரத்தினங்கள்போன்ற நக்ஷத்திரங்களாலிழைக்கப்பட்ட ஆகாயப்பந்தலெல்லாம் கந்தகப்புகை நிறைந்த குகைபோல் தோற்றுகிறது! கேவலம் மனிதனைப் பாருங்கள். அவன் எவ்வளவு அருமையான வஸ்து! என்ன புத்திவிசாலம்! என்ன அபாரசக்தி! என்ன அழகிய ரூபம்! என்ன தகுந்த அமைப்பு! என்ன தேவகாம்பீரியம்! சிருஷ்டியில் இவனுக்கு மேலில்லை என்று சொல்லவேண்டியிருக்கிறது! இருந்தாலும் இவனைப்பார்த்தால் "ஐயோ இவனுடைய சக்திக்குத்தகுந்த வேலையில்லாமல் இவ்வளவு அருமையானவஸ்து வீணாய் இப்படிக் கெட்டுப்போகிறதே—கொஞ்சநேரத்துக்கெல்லாம் சாம்பலாகப்போகிறதே" என்று பரிதாபமாயிருக்கிறது. உலகத்தில் மனிதனாவது ஸ்திரீயாவது எனக்கு திருப்தி கொடுக்கவில்லை—"சேலைகட்டிய மாதரை நம்பினால்—" மேலே தெரியுமல்லவோ? என்ன சிரிக்கிறீர்கள்? சேலைகட்டாத மாதரை நம்பலாமென்கிறீர்களா?

உக்கிர :—அப்படிப்பட்ட எண்ணம் ஒன்றுமுண்டாகவில்லை, சுவாமி!

ஹேமசந் :—பின் என் நான் சொன்னதற்கு சிரித்தீர்கள்?

உக்கிர :—உலகத்தில் மனிதனாவது ஸ்திரீயாவது தங்களுக்கு திருப்தி கொடுக்காவிட்டால், இப்பொழுது வரப்போகிற நாடகக்காரர்கள் தங்களுக்கு என்ன திருப்தியைக் கொடுக்கப் போகிறார்களென்று சந்தேகமுண்டாயிற்று நாங்கள் இவ்வூருக்கு வருகையிலும் வழியில் அவர்களைக் கண்டோம். அவர்களும் இங்கேயேதான் வருகிறதாகச் சொன்னார்கள்.

ஹேமசந் :—அப்படியா! ரொம்ப சந்தோஷம்! ராஜவேஷம் போடுகிறவன் எப்பொழுதும் நமக்கு வேண்டியவன்தான். யுத்தவீரனாக வருகிறவனுக்கும் வேலை கொடுப்போம். நாயக நாயகிகளுடைய பிரார்த்தனைகளையெல்லாம் நிறைவேற்றி வைப்போம். விதூஷகனுடைய விகடங்கள் வீண்போகாமல் சிரித்து வைப்போம். நாம் சிரிக்கிறது போதாவிட்டால் பெண் பிள்ளைகளிருக்கிறார்கள் சிரிப்பதற்கு. ஸ்திரீவேஷம் போடுகிறவனுக்கு 'கீச்சு'க் குரல் வராவிட்டால் அவனுக்கு ஒரு ஊதுகுழல் வாங்கிக் கொடுப்போம். அவர்கள் எந்த ஊர் நாடகக்காரர்கள்?

உக்கிர :—முன்னெல்லாம் தங்களுக்கு விசேஷ ஆநந்தத்தை உண்டுபண்ணின "ஸாரஸ்வத சங்கம்" என்னும் டில்லி பட்டணத்து நாடகக்காரர்களே?

ஹேமசந் :—அவர்கள் ஏது அவ்விடத்தைவிட்டு வெளியூர்களுக்குப் புறப்பட்டது? அங்கேயே அவர்களுக்கு நல்ல கௌரவமும் வரும்படியுமிருந்ததே.

உக்கிர :—இப்பொழுது 'மணி' என்னும் பெயர் பூண்ட சில பெண்மணிகள் "மணிமய விநோத சபா" என்னும் பெயரோடு அவ்விடத்தில் ஆடம்பரமாய் நாடகமாடி வருகிறார்கள். அவர்கள் "இந்திர சபா" 'தாராசசாங்கம்' 'டம்பாசாரி விலாஸம்' முதலிய நாடகங்களில் பச்சை பச்சையாய் லச்சையில்லாமல் இச்சைப்படி ஆடவும் பாடவும் ஏற்பட்டு விட்டார்கள். ஏற்கனவே பாமரர்களாயிருக்கிற சாமான்ய ஜனங்களை இப்பொழுது கேவலம் மிருகங்களாக்கி விடுகிறார்கள். இவர்களால் நம்முடைய பழைய நாடகக் காரர்களுக்குத் தற்காலம் வரும்படி குறைவாயிருக்கிறது. ஆனால் கொஞ்சகாலம் கழித்து ஜனங்களுக்கு இவர்களுடைய ஆட்டம் அலுத்துப் போய்விடும். அப்பொழுது நம்முடைய ஸாரஸ்வத சங்கத்தார் 'மறுபடி அங்கேயே போய் விடுவார்கள்.

ஹேமசந் :—ஒருக்கால் நமது சங்கத்தார் முன் போல் அவ்வளவு சிரத்தையாய் ஆடுகிறதில்லையோ?

உக்கிர :—எவ்வளவு சிரமப்பட்டு சிரத்தையுடன் ஆடினாலும் ஜனங்கள் தங்களுக்கு எங்கே மனது லயிக்கிறதோ அங்கேதான் போவார்கள். படிப்பில்லாத சாமான்ய ஜனங்களுக்கு ரஸத்துக்கும் விரஸத்துக்கும் வித்தியாசம் தெரிகிறதா என்ன?

ஹேமசந் :—மேலும் ஜனங்களெல்லாம் ஆடுகள் தானே. ஒருவன் சிரித்தால் எல்லாரும் சிரிப்பார்கள். ஒருவன் கைகொட்டினால் எல்லாரும் கைகொட்டுவார்கள். அவர்கள் மனது ஒருதடவை இருந்தது போல் இன்னொருதடவை இராது.

உக்கிர :—ஜனங்களுக்கு யாராவது பெண்பிள்ளை சபையில் வந்து நின்றால் போதும். அவள் எவ்வளவு அசந்தர்ப்பமாய் உளறினாலும் 'சபாஷ்' என்பார்கள். இதனால் அவளுக்கும் கர்வமுண்டாகி விடுகிறது.

ஹேமசந் :—இது சகஜந்தானே. இப்பொழுது என் சிற்றப்பன் ராஜாவாக இருப்பதனால் இவர் பட்டத்துக்கு வருமுன் இவர் நடைஉடைகளைப் பழித்துக் காட்டினவர்களெல்லாம் இப்பொழுது 100, 200 கொடுத்து இவருடைய படத்தைவாங்கி வீட்டில் வைத்துப் பூஜை செய்கிறார்கள். இதில் ஏதோ விசேஷ தத்துவமிருக்கிறது. அதை அறிந்து சொல்லக்கூடிய பண்டிதர்களையும் காணோம். (திரைக்குள் பலவாத்தியங்களுடைய கோஷங்கள் கேட்கிறது.)

கடோர்க்க —அதோ நாடகக்காரர்களும் வந்து விட்டார்கள்!

ஹேமசந் :—ஐயா; நீங்களிருவரும் உதயபுரிக்கு வந்ததில் மெத்த சந்தோஷம்; இருவரும் என்னுடன் கைகோர்த்துக்கொள்ளுங்கள்! உங்களைப்போலொத்த அந்தரங்க சிநேகிதர்களிடத்தில் இந்த வெளிமரியாதைகளெல்லாம் அவசியமில்லை. இருந்தாலும் வரப்போகிற நாடகக்காரர்களிடத்தில் இந்த மரியாதைகள் காண்பிக்கவேண்டியது அவசியமாயிருக்குமாதலால், உங்களிடத்தில் மட்டும் காண்பிக்காமலிருந்தால் நன்றாயிராது என்று என் புத்திக்குப் பட்டது. அதற்காகத்தான் உங்களை இவ்வளவு உபசரிக்கிறேன். ஆனால் என் சிற்றப்பனாயிருந்த தகப்பனாரும் என் தாயாயிருந்த சிறுதாயாரும் ஏமாந்திருக்கிறார்கள்.

கடோர்க்க :—எந்த விஷயத்தில் ஏமாந்திருக்கிறார்கள் சுவாமி?

ஹேமசந் :—நான் அவர்கள் நினைத்திருக்கிறபடி அவ்வளவு பைத்தியமல்ல. அப்படியிருந்தால் உங்களை இன்னாரென்று அறிந்துகொண்டு பேசியிருக்கவேமாட்டேன். அந்த எண்ணத்தோடுதான் ராஜா அவர்களும் ராணியாரும் உங்களை என்னிடம் அனுப்பியிருக்கிறார்கள். ஆனால் நான்மட்டும் ஈசானிய மூலையில் காற்றடிக்கும்போது மாத்திரம் பைத்தியமாயிருப்பேனேயொழிய காற்று நேர்வடக்கே திரும்பிவிட்டால் என் பைத்தியமும் நின்றுவிடும்.

(புலஸ்தியவர்யா வருகிறான்).

புலஸ்தி :—உங்களெல்லோருக்கும் க்ஷேமமுண்டாகட்டும்!

ஹேமசந் :—ஒரு சங்கதி சொல்லுகிறேன் கடோர்க்கஜசேன, நீங்களிருவரும் காதுக்கொருவராக நின்றுகேளுங்கள். 'அதோ வருகிறதே அந்தப் பெரிய குழந்தைக்கு இன்னும் பல்முளைக்கவில்லை.

உக்கிரநந் :—அவர் இரண்டாந்தாம் இக்குழந்தைப் பருவத்துக்கு வந்திருக்கிறார். ஏனெனில் வார்த்திபத்தில் குழந்தையின் சுபாவம் திரும்புகிறதென்று சொல்லுகிறார்கள்.

ஹேமசந் :—நான் ஒரு ஜோசியம் சொல்லுகிறேன்பார்: அவர் நாடகக்காரர்கள் வந்திருப்பதைத் தெரிவிக்க வருகிறார். (உரக்க) அப்புறம் போன திங்கட்கிழமை எங்கே இருந்தீர்கள்?

புலஸ்தி :—யுவராஜா அவர்களுக்கு ஒருசமாசாரம்!

ஹேமசந் :—புலஸ்தியவர்மா அவர்களுக்கு ஒரு சமாசாரம்! நாங்களெல்லாம் கல்விச்சாலையில் படிக்கும்பொழுது நாடகங்கள் ஆடுகிறதுண்டு.

புலஸ்தி :—அதுதான் சொல்லவந்தேன் சுவாமி. நாடகக்காரர்கள் அரண்மனைக்கு வந்திருக்கிறார்கள்.

ஹேமசந் :—ஆ, அப்படியா! அப்புறம் என்ன செய்கிறது?

புலஸ்தி :—விளையாட்டல்ல சுவாமி! நிச்சயமாகத்தான்!

ஹேமசந் :—நாங்களெல்லாம் நாடகமாடும்பொழுது ஒவ்வொரு வேஷக்காரனும் ஒரு கோவேறு கழுதையின் மேலேறிக்கொண்டுதான் ஆடுகிறது வழக்கம்.

புலஸ்தி :—நாடகத்திலும் சரி, வேஷத்திலும் சரி, அபிநயத்திலும் சரி, இவர்களுக்குமிஞ்சி கிடையாது; சிருங்காரரஸம், சோகரஸம், கருணாரஸம், ஹாஸ்யரஸம், எல்லாவற்றிலும் தேர்ந்தவர்கள். இவர்களிடத்தில் எல்லாம் பொருந்தியிருக்கும்.

ஹேமசந் :—ஹேஜனகா, மிதிலாபுரிமன்னா என்ன விலையிலாத்தினமுனக்ககப்பட்டதடா?

புலஸ்தி :—அவனுக்கு என்ன அகப்பட்டது சுவாமி?

ஹேமசந் :—தெரியாதா?

"புவியிலுதித்த பெண்மணியாமது
தவத்திலுதித்த நவமணியாம்—"

புலஸ்தி :—(தனக்குள்) இன்னும் என் பெண் ஞாபகந்தானு!

ஹேமசந் :—நான் சொல்லுகிறது சரியல்லவா ஜனகராஜனே?

புலஸ்தி :—என்னை ஜனகராஜனென்று கூப்பிட்டால் எனக்கும் தவத்திலுதித்த நவமணியான ஒரு பெண்ணிருக்கிறுள்.

ஹேமசந் :—நீர் சொல்லுகிறது பாட்டிலேற்படவில்லை. நான் அதை ஒப்புக்கொள்ளவேமாட்டேன்.

புலஸ்தி :—பாட்டில் வேறென்னதான் ஏற்படுகிறது, சுவாமி?

ஹேமசந் :—மேலே தெரியாதா?

"தாயாகித்தந்தையுமாய்த் தாங்குகின்றதெய்வம்
காயாது கனியாகிக் கலந்தினிக்குந் தெய்வம்
தெய்வமதே தெய்வம் தெய்வமதே தெய்வம்."

போய் பழையமுது சாப்பிட்டுவிட்டுப் புராணங்களைப் படித்தாலல்லவோ இதெல்லாம் பாடமாகும்! போய் வேலையைப் பாரும்! (தனக்குள்) நல்லவேளையாய் இதோ நாடகக்காரர்களும் வந்துவிட்டார்கள். இனி இந்தக் கிழத்தினிடத்தில் சிரமப்பட்டு யோசித்துத் தாறுமாறாய்ப் பேசவேண்டியதில்லை.

(நாலைந்து நாடகக்காரர்கள் வருகிறார்கள்)

வாருங்களையா வித்வான்களே! உங்களெல்லோருக்கும் நம் பெருவந்தனத்துடன் நல்வரவு கூறுகின்றேன். பழைய நண்பர்களாகிய உங்களையெல்லாம் பார்க்க மெத்த சந்தோஷமாயிருக்கிறது. ஏனையா ராஜவேஷக்காரரே முகத்தில் சுருக்கங்கள் உண்டாகிவிட்டதே உமக்கு! இதோ என் தோழிக்கும் மீசை அரும்புகட்டிவிட்டது! இனி உங்கள் வேஷம் பலியாது: முன்னிருந்ததைக்காட்டிலும் ஒருபிடி உயரம் வானுலகுக்குச் சமீபித்திருக்கிறாள். இன்னும் கொஞ்சநாள்போனல் சிறகுமுளைத்துப் பறந்துவிடுவாள்போலும். கண்டம்மட்டும் உடைந்து எருமைத்தொண்டையாய்ப் போகாமல் பார்த்துக்கொள் பெண்ணே! நல்லதிருக்கட்டும்! எங்கே, சுடச்சுட ஒரு பாட்டு! கேட்டு வெகுநாளாகிவிட்டது! வந்ததும் வாராததுமாய் மாதிரிக்குக் கொஞ்சம் பரீக்ஷைபார்த்துவிடுவோம். சீக்கிரம் சொல்லு.

முதல் நாடகக்காரன் :—எந்தப்பாட்டு வேண்டும் மகாராஜ்?

ஹேமசந் :—முன்னொருதடவை நீர் எழெட்டுப் பாட்டுக்களடங்கிய ஒரு பாகத்தை அபிநயத்தோடு தனிமையில் ஒப்புவிக்கக்கேட்டேன். அது அப்பொழுது எனக்கு வெகு ஆனந்தமாயிருந்தது. ஆனல் அது நாடகமாக ஒரே ஒருதடவைதான் சபையில் ஆடப்பட்டது. அப்பொழுது அது சபையோர்க்கு அவ்வளவாக ரஸிக்கவில்லை. ஏனெனில் சாமான்ய ஜனங்கள் விரும்புகிற படாடோபமாவது அல்லது போலிவித்வான்கள் விரும்புகிற சிலேடைகளாவது ஒன்றைப் பத்தாய்ச் சொல்லும் உத்பிரேக்ஷைகளாவது அதில் கிடையாது. எப்பொழுதும் ஜனங்களுக்கு அழகை அழகாகவே விட்டுவிட்டாற் போதாது. அதற்குக் கொஞ்சம் தங்கத்தகடு அகப்படாவிட்டாலும் வர்ணத்தகடாவது வாங்கி ஒட்டினல்தான் அழகை அழகென்று ஒப்புக்கொள்வார்கள். ஆனல் எனக்குத்தெரிந்த

சில உண்மையான வித்வான்கள் அதை அடக்கமும் அமைதியும் அழகும் பொருந்தின நாடகமென்று ஒப்புக்கொண்டார்கள். அதில் முக்கியமாய் நான் பிரியப்பட்ட பாட்டுக்களில் முதல்பாட்டு இப்படித் தான் ஆரம்பிக்கும். யோசித்துச் சொல்லுகிறேன். அது சந்திரவதி இறந்துபோன தன் மகனைக்குறித் துப் புலம்புமிடம்.

"முறையே செலுத்து சொங்கோலறத்தி லெவர்
[க்கும்"

இல்லை, அப்படியில்லை—இப்பொழுது ஞாபகம் வந் தது—"செங்கோல்" என்று ஆரம்பிக்கும்:—

"செங்கோலறத்தின் முறையே செலுத்துதிற
[லோனெவர்க்கு முறவோன்
வெங்கோபயானை விறன்மன்னனம்மை விடுவி
[க்கவெண்ணி வருநாள்,
பங்கேருகத்து மலர்போல் விளங்குவதனு, மகி
[ழ்ந்தபரிவா
லெங்கே யெனுசைமகனென்று கேட்கிலெதி
[ரேது சொல்வன் மகனே!
நல்லோர் வகுத்த முறையா மறங்களுலெட்டி
[லொன்று குறையேம்
இல்லோரை யற்பமிகழோமிறுக்கு மிறையின்
[றியேறவுகவேம்
சொல்லோமறுத்துமுரையோ முரைத்த துற
[வோர்கள் புத்திகடவேம்
எல்லோர் தமக்குமினிதே விளைப்பமேதாக வந்
[ததிதுவே—
மறைநீதியுற்று புறநாடழித்து வருசேனையாள்
[வதறியேம்,
மறைநீதிமுற்று முணராவமைச்சையணிவாயில்
[வைத்து மறியேம்,
குறையே யிழைத்துவினையே,விளைத்தகுடிகளை
[த்திருந்து மறியேம்,
இறையே, தவத்தின்விளைவே, யெமக்குமிது
[வோ விதித்த விதியே"—

மேலே நீர் சொல்லும்.

புலஸ்தி:—தாங்களே வெகு நேர்த்தியாய்ப் பாடு கிறீர்களே!—அழுத்தந்திருத்தமாய் நிறுத்தவேண் டிய இடத்தில் நிறுத்திப் பொருள்விளங்கச் சொல் லுகின்றீர்களே.

நாடகக்காரன்:—"பனியானனைந்து வெயிலா
[லுலர்ந்து பசியாலலைந்து முலவா

வனியாயவெங்கணரவாலிறந்தவதிபாவமெ
[ன்கொ லறியேன்
தனியேகிடந்துவிடநோய்செறிந்து தரைமீது
[ருண்ட துரையே
யினியாரைநம்பியுயிர்வாழ்வமென்றனிறை
[யோனும் யானுமவமே—
நிறையோசைபெற்ற பறையோசையற்று நிறை
[யாய் நிறைந்த கழுகின்

சிறகோசையுற்றசெடியூடிறப்கவிதியாரிழைத்த
[செயலோ,
மறையோனிரக்கவளநாடனைத்தும்வழுவாதளி
[த்த வடிவே
யிறையோனளித்தமகனே, யுனக்குமிதுவோ
[விதித்த விதியே!
வானின்றிழிந்து சொரிகின்றதாரை மழைபோ
[லவீழ விழிநீர்
ஊனின்றி மேனியுதிரங்கள் சிந்தவுயிரின்றி
[வெம்புதழலின்
மேனின்று வெந்ததளிர்போல் மயங்கி விதியா
[ரை நொந்துதனியே
யானின்றிரங்கவேனென்பதில்லை யிதுவோவு
[வீதி மகனே!
கனமுந்தேவ தருவுந்தரித்த காமும் பெருத்த
[வுரமும்
தினமுஞ் சிறக்குமுகமுந்தரித்தசிகையும் கிடக்
[குமுறை கண்டு
இனமுந்தரித்ததுயிரானபாவி யிறவாமலென்
[றன் மகனே
மனமுந்தரிப்பதிலை நொந்து பெற்ற வயிறுந்தரிப்
[பதிலையே!

புலஸ்தி:—இதென்ன கணக்கில்லாமல் வளரு கிறதே!

ஹேமசந்:—ஆம். நாளைக்கொரு நல்லநாள் பார் த்து உமது தாடியையும் இந்தப் பாட்டுக்களையும் அம்பட்டன் கொட்டகைக் கனுப்பிவிடுவோம்—மே லே சொல்லுமையா—அவருக்கு ஏதாவது "குயி லே மயிலே கேகிலாமே" என்று பாடினுல் இன்று முழுவதுங் கேட்டுக்கொண்டிருப்பார்; இல்லாவிட் டால் அவருக்குத் தூக்கம் வந்துவிடும்—மேலேசொ ல்லும் நீர்—"என்னுயகன்றன்"—

நாடகக்காரன்:—"என்னுயகன்றன் மணிமார் பிலேறி"—

ஹேமசந்:—"மணிமார்பிலோ" "விரிமார் பிலோ"?

புலஸ்தி:—"மணிமார்பிலேறி" என்பதுதான் பொருந்தியிருக்கிறது.

நாடகக்:—"என்னுயகன்றன் மணிமார்பிலேறி
[விளையாடுகின்ற வெழிலோய்,

முன்னுள் விளைந்தகனன்மூழ்கவெம்மின்முத
[லே நடந்தமயலாய்,
சென்னுய் திரண்டு செறிகயனிருந்து தெளியா
[திரங்குமெனைநீ
யன்னுய் வருந்தலையெனுத தின்றனறிவுக்கடா
[துமகனே
மறவாளை யொத்தவிடமாசுணத்தின் கடியாலி
றந்தனவெனுெ
இறவாதிருக்குமதிபாவி தன்னெனுடுறவே தென
[ச்கருதியோ

திறவாய் சிவந்த கனிவாயுரைத்தல் செய்கிலாய்
[முகத்துவிழியாய்
பிறவாத நித்தனடியே வழுத்து பெருமானளி
த்த மகனே,
வடியேறு வெற்றிநெடுவேள் மலர்க்கை மகனோ
[டிறந்து மடியாக்
கொடியேன் முகத்தில் விழியார் முனிக்குவள
[ராடழித்த கொடையார்
இடியேறடர்த்த மாமாகி மண்ணினிடையேயு
[ழைத்தலழகோ
அடியேனையொக்க முடியாதிருத்தல நியாயமிக்க
[யமனே

புலஸ்தி :—அதோ பாருங்கள், அவன் முகமெல்லாம் சிவந்து கண்களில் நீர் ததும்புகிறது—போதும்பிள்ளாய், நிறுத்து—

ஹேமசந் :—போதும், அப்புறம் பார்த்துக்கொள்வோம்—ஐயா, நீரிந்த ஆட்டக்காரர்களுக்குத் தகுந்தஜாகை ஏற்பாடுசெய்து அவர்களுக்கு வேண்டிய சாமான்களைக் கொடுத்து அவர்களைக் கவனித்துக் கொள்ளும். இல்லாவிடில் நாளைஇரவு ஆட்டத்தில் உம்மைப்போல் அபிநயம் பிடிக்க ஆரம்பிப்பார்கள். அப்புறம் என்னிடம் முறையிடுவதிற் பயனில்லை. இவர்கள் தானையா அந்தந்தக் காலத்தின் கோலத்தையெல்லாம் சித்திரத்தி லெழுதுவதுபோல் படம் பிடித்து வைக்கிறவர்கள்—இவர்கள் வாயால் நல்ல பெயர் வாங்கவேண்டும்—ஆதலால், நான் சொல்லுகிறது தெரிந்ததா, கொஞ்சம் தயவுசெய்து அவர்களைக் கவனித்துக்கொள்ளும்.

புலஸ்தி :—அவரவருடைய யோக்கியதைக்குத்தகுந்தபடி மரியாதை செய்கிறேன் சுவாமி!

ஹேமசந் :—அதுபோதாதையா, ஓய்! அப்படியொன்றுஞ் செய்யாதேயும்! ஒவ்வொருவனையும் அவனுடைய யோக்கியதைக்குத் தகுந்தபடி மரியாதை செய்ய ஆரம்பித்தால் கசையடிக்குத் தப்புகிறவன் யார்? ஆதலால் அப்படிச் செய்யாமல் ஒவ்வொருவனையும் அவனுடைய யோக்கியதை எப்படி இருந்தபோதிலும் நம்முடைய அந்தஸ்துக்கும் யோக்கியதைக்கும் தகுந்தபடி கௌரவப்படுத்துவோம்—பரம அயோக்கியனையும் நாமவனுக்குச் செய்யுமரியாதையினால் அவனுடைய அயோக்கியதையை நம்மிடத்திலாவது நம்மெதிரிலாவது காண்பிக்கவெட்கப்படும்படிசெய்வதுதான் நம்பெருந்தன்மைக்கழகு! நல்லது, அவர்களை அழைத்துக்கொண்டு போங்கள்.

புலஸ்தி :—எல்லோரும் என்னுடன் வாருங்களையா.

ஹேமசந் :—நீங்களெல்லோரும் போய் வாருங்கள்— நாளைக்கு ஒரு ஆட்டம் போடுவோம்(முதல் நாடகக்காரனைத்தவிர மற்றெல்லோரும் புலஸ்தியவர்மாவுடன் போய்விடுகிறார்கள்) நண்பனே நானும்மை ஒரு சங்கதி கேட்கவேண்டும். உங்கள்சங்கத்தாருக்கு "ஜய்பாலன்வதம்" ஆடத்தெரியுமா?

நாடகக்காரன் :—தெரியும், ஆனால் அதிகதடவை ஆடினதில்லை.

ஹேமசந்.—நாளை இரவு அந்த ஆட்டம் போடுவோம். அதில் புதிதாய் பத்துப்பதினைந்து வரி நான் சேர்த்து எழுதித்தருகிறேன் அதையும் சேர்த்துப்பாடம் பண்ணிவிடமுடியுமல்லவோ?

நாடக :—முடியும் மகாராஜ்!

ஹேமசந் :—நல்லது நீர் அதோ அந்தப்பெரியவரோடு கூடப்போம். அவர் காதில் கேட்கும்படி அவரை நீங்கள்யாரும்பரிஹாஸம்செய்யாதேயுங்கள். (முதல் நாடகக்காரன் போய்விடுகிறான்) நண்பர்களே நீங்கள் போய் வாருங்கள்! அப்புறம் ராத்திரி பேசிக் கொள்வோம். இன்றைக்கு உங்களைக்கண்டதில் மிக்கசந்தோஷமாயிற்று.

கடோர்க்க }
உக்கிரருத் } —அநேக நமஸ்காரம் தங்களுக்கு!

ஹேமசந் :—வந்தனம், வந்தனம் - (கடோர்க்கனும் உக்கிரருத்திரனும் போய்விடுகிறார்கள்)—இனி ஏகாந்தமாயிருக்கலாமப்பா! நம் ஜன்மமென்ன கழுதை ஜன்மமிது! இதோ இந்த நாடகக்காரனைப்பார்! விளையாட்டுக்காகப் போட்டுக்கொண்ட பொய் வேஷத்தில் தனதல்லாத துக்கத்தைத் தனதாக பாவித்துக் கொள்வதினாலேயே உண்மையாக துக்கமுண்டாகி முகத்தில் ஏக்கந்தோன்ற குரல் தழதழத்துக் கண்களில் நீர் ததும்ப அழ ஆரம்பித்துவிட்டான்! இதெல்லாம் யாருக்காக? சந்திரவதிக்காகவா? இவன் யார்? சந்திரவதி யார்? ஒருவருக்கொருவர் என்ன உறவு? இவன் முன்பின் பார்த்திராத சந்திரவதிக்கே இப்படி அழுவானானால் என்னைப்போல் தன் சொந்த பிதாவை அநியாயமாய் அக்கிரமமாய் இழந்திருக்கும்பக்ஷத்தில் தான் என்ன பாடுபடமாட்டான்? பிறரை என்ன பாடுபடுத்தமாட்டான்?—நாடக சாலையெல்லாம் கண்ணீர் ஆறாய்ப் பெருகடிப்பான்—காது கொப்புளிக்கக் கதறுவான். குற்றமுள்ள நெஞ்சைக் குத்திப் பிடுங்கிவிடுவான். சுபாவமாயிருப்பவர்களைப் பிரமித்து மயங்கச்செய்வான்—நானோவெனில் வெறுந் தூங்குமூஞ்சித்தடியனாய் எனக்கு நேர்ந்திருக்கும் துக்கத்துக்கும் அவமானத்துக்கும் யாதொரு பரிகாரமுந்தேடாது சுத்த சாப்பாட்டுராமனாய் விளங்குகிறேன். என்னையா. ஒரு சொந்த தகப்பன், ஒரு மகாராஜன், உத்தமகுணமுள்ள பிரபு, இப்பேர்ப்பட்ட என் பிதாவை ஒருசுடுகாட்டுப் பறையன், ஒருமகாபாதகனாகிய சிற்றப்பன் கொன்றுவிட்டு என் சொந்தத் தாயையும் கூட்டிக்கொண்டு சுகமாய் ராஜ்யமாளுகிறான்—அதையும் நான் உயிரோடு கண்ணால் பார்த்துக்கொண்டிருக்கிறேன்—சே! ரோஷமுள்ள புருஷனிப்படி யிருப்பானா? நாளைக்கு யாராவது என்னைப்பார்த்து "ஏ, கைம்பெண்ணே" என்று கூப்பிட்டால் பதில் சொல்லாமல் தலையில் முக்காடிட்டு அந்தப் பட்டப்பெயரை அங்கீகரிக்க வேண்டியதுதான்—ரோஷமில்லாவிட்டாலும் இப்படி அநியாயமாய் மாண்டுபோன பிதாவுக்காக மனமிரங்கி வருந்

தவேண்டாமா? நம் நெஞ்சுதான் கல் நெஞ்சோ? ஹ்ருதயத்தில் ஈரமென்பதே கிடையாதோ? இந்தப் பிதாவுக்காக வருத்தப்படாத நாம்தானா இவ்வளவு பெரிய ராஜ்யத்தை ஆண்டு பிரஜைகளைத்தன் பிராணனைப்போல் காப்பாற்றப் போகிறோம்! என்னுடைய ஸ்தானத்தில் வேறெவனாவது இருந்தால் இத்தனை நாழிகைக்குள் ஊரைக்கதற அடித்துவிடுவான்—அந்தத் திருட்டுப் 'படவா'வாகிய கொலை பாதகனைக் கண்டங் கண்டமாய்த் துண்டாடி நாய்க்கும் நரிக்கும் இரையாகப் போட்டுவிடுவான். நானோ இந்த வசவுகளோடு சரி! போகிறது, இந்தமட்டாவது தைரியமாய்த் தனிமையான இடத்தில் யாருக்கும் காது கேட்காதபடி வைகிறேனே! அதைப் பற்றி சந்தோஷம்!

ஆம் அதிருக்கட்டும்—ஆனால் இப்பொழுது அழுதாற் போதுமா? அதனாலென்ன பயன்? எனக்கழத்தெரியாதா என்ன! நல்லது அழவேண்டாமையா! இந்தக்ஷணமே போய் அந்தச் சண்டாளனைக் கொல்லுகிறதற்கு என்னதடை? அவனை நான் என் கொல்லவேண்டும்? அந்தக் காமாட்டி வேலையை நான் என் ஒப்புக்கொள்ளவேண்டும்? உன் பிதாவுக்கு நீ புத்திரனல்லவா? உன் பிதாவை அவன் கொல்லவில்லையா?—அவன் கொன்றால் அதற்குள்ள தண்டனை அவனை ஒருபோதும் விடாது. கடவுள் என்னை நியாயாதிபதியாய் ஏற்படுத்தியிருக்கிறாரா?—இந்த விஷயத்தில் கடவுள் உன்மூலமாகத்தான் அவனை தண்டிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்—அது தான் ஏற்படவில்லை! நான் அவனைக் கொல்லவேண்டியது கடவுள் சம்மதமென்று யாராவது காண்பிக்கும் பக்ஷத்தில் இதோ கொலைசெய்யத் தயாராயிருக்கிறேன். மேலும் அவனைக்கேட்டால் அவன் தான் செய்த காரியத்திற்கு என்ன சமாதானம் சொல்லுவானோ? அவன் மனதில் 'என்ன காரணமிருந்திருக்குமோ? ஆனால் உன் ராஜ்யத்தைப் பரமதுஷ்டனிடத்தில் கொடுத்துவிட்டு நீ சும்மாயிருக்கலாமா?—அவன் துஷ்டத்தனம் சகியாவிட்டால் ஜனங்களே அவனைக் கொன்றுவிட்டு, நான் யோக்கியனாயிருந்தால் என்னை ராஜ்யத்திலிருத்தி விடுவார்கள். அதைப்பற்றி என்ன கவலை?—சே! இதென்ன பயித்தியக்கார யோசனைகள்! இந்த மாதிரி விஷயத்தில் இப்படி யாரும் குறுக்குக் கேள்விகள் கேட்கமாட்டார்கள்—அதற்கு நானென்ன செய்கிறது? பிறரைப்போல் நானில்லை என்பது குற்றமா? என்மனதில் இந்தக் கேள்விகளெல்லாம் பிறக்கின்றனவே, அவைகளுக்கு பதில் சொல்லிவிட்டுத்தானே நான் மேல் நடவடிக்கை நடத்தவேண்டியிருக்கிறது. நான் ஒரு காரியத்தைச் செய்வதற்குப் பிறரெல்லாம் அதையே செய்கிறார்களென்பது ஒருபோதும் காரணமாகமாட்டாது. என் செய்கைகளுக்கெல்லாம் என்னிடத்திலேயே காரணந் தோன்றினால்தான் என்னால் செய்யமுடியும்.

ஆனால் இவ்வளவு வேதாந்தம் பேசுகிற நீ அன்று தோன்றிய தேவதையினிடத்தில் உன் சிற்றப்பனைக் கொன்றுவிடுவதாக ஏன் வாக்களித்தாய்?—அப்பொழுது இவ்வளவு யோசிக்குந் திறமையில்லை—யோசிக்க சாவகாசமுமில்லை—ஆனால் கொடுத்தவாக்கை, நிறைவேற்றவேண்டாமா? பிசகான காரியத்தை செய்வதாக வாக்களித்தால் பின்பு அதை நிறைவேற்றாமலிருப்பதுதான் சரியான காரியம். மேலும் எனக்குத்தோன்றிய தேவதை துர்தேவதையோ, பிசாசமோ என்னவோ! என்னைக் கெட்ட வழியில் தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்க வந்ததோ என்னவோ! எல்லாவற்றிற்கும் நாளைய ஆட்டத்தில் என் சிற்றப்பன் எப்படி நடந்துகொள்கிறானென்று கவனித்து அதற்குத் தக்கபடி அப்புறம் நாமும் நடந்துகொள்வோம். அநேக இடங்களில் கொலை செய்தவர்கள் நாடகத்தில் நடக்கும் பொய்க்கொலையைக் கண்டவுடன் தங்கள் குற்றத்தை ஒப்புக்கொண்டிருப்பதாகக் கேள்வி - என் சிற்றப்பன் குற்றமுள்ளவனாயின் நாளைய நாடகத்தில் தன் குற்றத்தை அவன் வெளிப்படையாய் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், முகத்திலும், பேச்சிலும், செயல்களிலும் உண்மை ஏற்பட்டுவிடும்—ஆம், நாளைய ஆட்டத்தில்தான் எல்லாந் தெரியப்போகிறது - அதுவரையில் பொறுத்துக்கொள்வோம் - பொறுத்தார் பூமி ஆள்வார்.

(போய்விடுகிறான்.)

(இரண்டாவது அங்கம் முற்றும்.)

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

அதிகாரம்—11.

சேஷய்யர் பங்களாவில் தன் மனைவியோடும், பெண்ணோடும் கொஞ்சகாலம் வெகு சுகமாயிருந்தார். ஆனால் அந்தப்படி வெகு நாளிருக்க அவருக்கு அதிர்ஷ்டமில்லை. ஜானகியம்மாளுக்கு ஓர் வீக்க வியாதி உண்டாகி அது கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துவிட்டது. என்ன வைத்யம் பார்த்தும் வியாதி நீங்கவில்லை. கடைசியில் ஒருநாள் ஜானகியம்மாளுக்கு, சற்று மயக்கமாகவும் சற்று நல்லபுத்தியாகவுமிருந்தது. ரகசியமாகத்தன் சகி சுப்புவுக்கு சொல்லியனுப்பினாள். சுப்புவைக் கண்டதும் ஜானகியம்மாள் பெருமூச்சு விட்டுக்கொண்டு

சுப்பு நானென்ன செய்யட்டும்! என் புருஷன் என் பேரிலிருக்கிற பிரியத்துக்கு நான் அவரை இப்படி மோசம் செய்யலாமா. எனக்கு இதை நினைக்க நினைக்க ஒன்றும் ஓடவில்லையே. அவரை அழைத்துவா. அவர் காலில் விழுந்து நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேனென்றாள். சுப்பு அம்மாள் "ஜானகி பேசாமல் படுத்துக்கொள். வியாதியின் வெறியில் நீ என்ன என்னமோ பிதற்றுகிறாய்"யென்றாள். கடைசியில் ஜானகியம்மாள் தன் புருஷனிடம் நேரில் சொல்வது சரியல்லவென்று தீர்மானித்து சுப்பு கடிதம் பேனா மைக்கூடு கொண்டுவா சீக்கிரம் என்றாள். சுப்பு கொஞ்சம் தயங்கினதைக் கண்டு ஜானகியம்மாள் அப்படியே படுக்கையை விட்டு விறைத்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்து அவளை கோரமாய் விழித்துப் பார்த்தாள். சுப்பு பயந்துபோய்விட்டாள். ஜானகியம்மாள்:—சுப்பு இவளோ செத்துப்போய் விடப்போகிறாள்; நாம் இவள் சொல்லைக் கேழ்ப்பானேனென்று நினைக்கிறாயோ. நீ அப்படி நினைத்தால் நாசமாய்ப்போய் விடுவாயென்றாள். சுப்பு பயந்து அவள் காலில் விழுந்து அம்மா கடிதம் என்னத்திற்கு நான் அவரிடம் நேரில் சொல்லி விடுகிறேனென்றாள். ஜானகியம்மாள் அதுகூடாது நீ எனக்கு நன்றியறிவுள்ளவளாயிருந்தால் கடிதத்தை எடுத்துக்கொண்டு சீக்கிரம் ஓடிவா என்றாள். சுப்பு ஓடிப்போய் கடிதத்தை எடுத்துக்கொண்டு வந்தாள். ஜானகியம்மாள் ஓகோ மயக்கம் அதிகமாகிறதே சீக்கிரம் உட்கார் நான் சொல்வதை எழுது என்றாள். அதற்குள் கொஞ்சம் களைத்துப் படுத்துக்கொண்டாள். பிறகு கொஞ்சநேரத்துக்குப்பின்பு கண்ணை விழித்துக்கொண்டு, சுப்பு உன்னை நான் நம்பமாட்டேன். கடிதத்தை என்னிடம் கொடு. நான் எழுதுகிறேனென்று வாங்கிக்கொண்டாள். பிறகு சற்றுநேரம் எழுதினாள். கண்ணில் தாரைதாரையாக ஜலம்பெருகிற்று. பிறகு சற்று படுத்துக்கொண்டாள். சற்றுநேரத்திற்கெல்லாம் மறுபடியும் திடீரென்று எழுந்து அடி சுப்பு என் உயிர் சீக்கிரம் போய்விடும் போலிருக்கிறது. இந்த மைக்கூட்டை கையில் வைத்துக்கொள். நான் சீக்கிரம் எழுதவேண்டுமென்று வெகு வேகமாய் எழுதினாள். கடைசியில் தன் கையெழுத்துப் போட்டு, சுப்பு இந்தா உன் கையெழுத்தையும் போடென்றாள். சுப்பு அப்படியே போட்டாள். பிறகு கடிதத்தை மடித்து தன் புருஷனுடைய விலாசத்தை எழுதினாள். பிறகு களைத்துப்போய் சற்று படுத்துக்கொண்டாள் சற்று நேரத்திற்கெல்லாம் விழித்துக்கொண்டு சுப்பு உன்னை நம்பமுடியாது. இந்தக் கடிதத்தை என் புருஷனுக்கு கொடுப்பதாக சத்யம்செய் என்றாள். சுப்பு அந்தப்படியே சத்யம் செய்தாள். ஜானகியம்மாள் 3 தரம் சத்யம் வாங்கிக்கொண்டாள். அந்தக் கடிதத்தை வீட்டைவிட்டு எங்கேயும் கொண்டு போவதில்லையென்று மறுபடியும் 3 தரம் சத்யம் வாங்கிக்கொண்டாள். சுப்பு இந்தக் கடிதத்தை கொடுக்காமல்போனால் நான் பிசாசாயிருந்து உன்னைப் பிடித்துக்கொண்டுவிடுவேன் ஜாக்ரதை யென்றாள். பிறகு சுப்பு கடிதத்தை ஜாக்கிரதையாய் வைப்பதற்கு உள்ளே போய்விட்டு வருவதற்குள் ஜானகியம்மாள் கண் சுழண்டுபோய் மூச்சு இல்லாமல் படுத்திருந்தாள். சுப்பு இதைக்கண்டு உடனே சேஷய்யர் தங்கம் எல்லோரையும் கூப்பிட்டாள். உடனே வைத்தியருக்கும் சொல்லியனுப்பப்பட்டு அவரும் வந்து சேர்ந்தார். வைத்யர் கையைப்பார்த்துவிட்டு இனி பிரயோஜனமில்லையென்று சொல்லிவிட்டார். உடனே காமேசுவரய்யர் முதலியவர்களுக்கு தந்தி கொடுக்கப்பட்டது. அவர்களெல்லாம் வருவதற்குள் ஜானகியம்மாளுக்கு பிராணன் போய்விட்டது. சேஷய்யர்பட்ட துயரம் ஒருவராலும் கணக்கிட முடியாது. அவர் வெகு நாள் குழந்தையில்லாமலிருந்து பிறகு வெகு அதிசயமாக தங்கம் பிறந்து தங்கத்திற்கு கலியாணமான ஒரு வருஷத்திற்குள் தங்கத்தின் சாந்திகலியாணம் முதலிய மற்ற சந்தோஷங்களை அனுபவிக்க ஜானகியம்மாளுக்கு கொடுத்து வைக்காததைப்பற்றி சேஷ்யருக்கு வெகு விசனம். ஆனால் இவர்தான் கொடுத்து வைத்தாரா – அதுவுமில்லை. ஆனால் மனிதர்களுக்கு தனக்கு வரப்போகிறது எங்கே தெரிகின்றது. அய்யோ சாகப்போகிற பிணம் செத்த பிணத்திற்கு அழுகின்றதே என்று பட்டணத்துப்பிள்ளை சொன்னது சேஷய்யருக்குத்தான் சரியாயிருந்தது. ஜானகியம்மாளிறந்த பிறகு சேஷய்யருக்கு இங்கே இருப்பதில் மனமில்லை. ஆனால் தங்கத்திற்கு என்ன செய்கிறது. அவளை எங்கே விட்டுப்போகிறது. அவளை தனியாக விட்டுப் போவதும் அவர் மனதுக்கு திருப்தியாகவில்லை. ஜானகியம்மாள் இறந்ததற்கு வந்தவர்களெல்லாம் ஊர்போய் சேர்ந்தபிறகு ஒருநாள் சேஷய்யர் ஒரு அறையில் தனியாக யோஜித்துக்கொண்டே ஜானகியம்மாள் நினைப்பினால் கண்ணும் கண்ணீருமாயிருந்தார். அச்சமயத்தில் தங்கம் மெள்ளப்போகவும் அவருக்கு அவளைப்பார்க்க வருத்தம் இன்னும் அதிகரித்தது. தங்கம் அவரைப்பார்த்து தானும் அழ ஆரம்பித்தாள். இது நிற்க சுப்பு சேஷய்யரிடம் ஜானகியம்மாள் கடிதத்தை கொடுக்கலாமா வேண்டாமா என்று வெகுநேரம் யோஜித்துக்கொண்டிருந்தாள். கடிதத்தை நாம் கொடுத்தால் பிறகு சேஷய்யர் வீணில் ஜானகியம்மாள் மீது கோபப்படுவார். நம்மிடத்திலும் அவருக்கு வெறுப்பு உண்டாகும். இதை கொடுப்பானேனென்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டாள். பிறகு ஏதோவொன்றை நினைத்துக் கொண்டவள்போல் ஓகோ நான் என் யஜமானியம்மாளுக்கு என்ன துரோகியாயிருக்கிறேன். என்னிடம் சத்யம் வாங்கியிருக்கிறாளே. நான் சத்யம் தவறலாமா. அடி சுப்பு நீ மட்டும் இந்தக்கடிதத்தைக் கொடுக்காமல் போனால் நான் இறந்தும் உன்னையே சுற்றிக் கொண்டிருப்பேன் என்று சொன்னாளே. அப்படி சொல்லியி

ருக்க நான் கொடுக்காமலிருக்கலாமா என்று இப்படி யோஜித்துக்கொண்டே சற்று இருந்து பிறகு ஏதோவொன்றை தீர்மானம்செய்து கொண்டவள்போல திடீரென்று எழுந்திருந்து நல்லது இதுதான் சமயம் அவர் அடுத்த அறையில் தனியாயிருக்கிறார். வந்தது வரட்டும். நான் ஒரே ஓட்டமாய் ஓடி அவர் பாதத்தில் விழுந்து ஒன்றும் கோபித்துக்கொள்ளாமலிருக்கும்படி வேண்டிக்கொண்டு கடிதத்தைக் கொடுத்துவிடுகிறேனென்று சொல்லிக்கொண்டே சேஷய்யரிருந்த அறைக்கு வெளி அறையில் போய் சற்று நிதானித்து சேஷய்யர் என்ன செய்கிறாரென்று அங்கிருந்தே தெரியாமல் ஒண்டிக்கொண்டு எட்டிப்பார்த்தாள். அந்த சமயத்தில் சேஷய்யர் "தங்கம் வேண்டாமடி இனிமேல் உன் தாய் வரப்போகிறாளா. அய்யோ அழுது அழுது முகம் வாடிப்போய்விட்டதே. உனக்குத் தாயே இருந்ததில்லையென்று நினைத்துக் கொள்ளடி. உனக்குத் தாய் இனி நான்தான். நீ விசாரப்படாதே" என்று வெகு பரிதாபத்துடன் சொல்லிக்கொண்டிருந்தார். சுப்புவுக்கு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. அய்யோ அவர் இவ்வளவு பிரியமாக தங்கத்துடன் பேசிக்கொண்டிருக்கும்போதா நான் கடிதத்தைக் கொடுக்கிறது. அய்யோ நான் பாவி. என் யஜமானியம்மாள் இந்த காரியத்தை என்னை செய்யும்படி செய்து விட்டாளே. ஓகோ அவர் எங்கேயாவது வந்துவிட்டால் என்ன செய்கிறது. ஒரே ஓட்டமாய்ப்போய் கொடுத்துவிடட்டுமா. அய்யோ நான்மாட்டேன். இந்த உலகமே என் தலையில் இடிந்து விழுந்தால்கூட நான் இந்தக் கடிதத்தைக் கொடுக்கமாட்டேன் என்று ஒரு நொடியில் தீர்மானம் செய்துகொண்டு ஒரே வேகமாய் தன்னறைக்குள் ஓடிப்போய்விட்டாள். பிறகு அன்றைய தினம் முழுவதும் அவள் இதே நினைவாயிருந்தாள். சேஷய்யருக்கு இவளைப் பார்க்கும்போதெல்லாம் இவள் முகம் மாறியிருப்பதைக்கண்டு இதென்ன காரணமென்று ஆச்சரியப்பட்டு சில சமயங்களில் சந்தேகிக்கவும் ஆரம்பித்தார். அன்றிரவு சுப்புவுக்கு தன் கனவில் ஜானகியம்மாள் வந்ததுபோலும் தன்னையேன் கடிதத்தைக் கொடுக்கவில்லையென்று மிரட்டியதுபோலும் கனவுகண்டாள். சுப்புவுக்கு அந்த வீட்டில் இதே நினைவாய் இப்படி இருக்கவும் இஷ்டமில்லை. கடிதத்தை சேஷய்யரிடம் கொடுக்கவும் இஷ்டமில்லை. கடைசியாக அந்தக் கடிதத்தை எங்கேயாவது எடுத்துக்கொண்டு ஓடிப்போய் விடுகிறதென்று யோஜித்தாள். பிறகு ஓகோ நமது யஜமானி வீட்டைவிட்டு கடிதத்தை எடுத்துக்கொண்டு போகக்கூடாதென்று சொல்லி சத்யம் வாங்கியிருக்கிறாளே. இதற்கு நாமென்ன செய்வதென்று யோஜித்து கடைசியாக அந்தக் கடிதம் ஒருவர் கையிலும் அகப்படாமலிருக்கும்படி அந்த வீட்டிலேயே ஒளித்துவைத்துவிட்டு ஓடிப்போய்விடுகிறதென்று தீர்மானஞ்செய்தாள். ஆனாலப்படி ஓடிப்போவதில் யஜமானன் எதையாவது திருடிக்கொண்டு போய்விட்டாளென்று சந்தேகிப்பாரோவென்று நினைத்து அப்படி நினைக்காமலிருக்கும்பொருட்டு ஓர் கடிதத்தை விபரமாக எழுதிவைத்துப் போவதாகவும் தீர்மானித்தாள். இப்படி கொஞ்சநாள் செல்வதற்குள் அந்த வீட்டில் சுப்பு தனிமையாயிருந்ததற்கும் சேஷய்யர் வீட்டில் வேறு ஒருவருமில்லாமலிருந்ததற்கும் சேஷய்யர் சுப்புவை வைத்துக்கொண்டிருக்கிறாரென்ற அபவாதம் வந்துவிட்டது. சுப்புவுக்கு இதைக் கேழ்க்க சகிக்கமுடியவில்லை. உடனே வீட்டைவிட்டுப் போய்விடுகிறதென்று தீர்மானித்தாள். சுப்பு வீட்டைவிட்டுப் புறப்படுங்காலத்தில் கடிதத்தை எங்கே வைக்கிறதென்று யோஜித்துப்பார்த்தாள். கடிதம் கெட்டுப்போகாமல் வேண்டிய சமயத்தில் அகப்படும்படி ஜாக்ரதையாயுமிருக்கவேண்டும். எளிதில் மற்ற ஜனங்களுக்கு அகப்படும்படியாயுமிருக்கக்கூடாது. இப்படிப்பட்ட இடம் அவள் எங்கே தேடியும் அகப்படாமல் கடைசியில் அந்த பங்களாவைச் சேர்ந்ததும் வெகுநாளைக்குமுன் கட்டப்பட்டு இடிந்துபோனதுகள் போக மீதி ரிபேர்கூட செய்யப்படாமலிருக்கும் ஓர் கட்டடத்தைப் பார்த்தாள். சுப்பு உடனே இதுதான் தனது யோஜனைக்குத் தகுந்த இடமென்று கண்டு வெகுவேகமாய்ப் போய் அக்கட்டிடத்திற்குள் நுழைந்தாள். அக்கட்டிடத்தில் பேச்சுமூச்சு இல்லாமல் நிசப்தமாயிருந்தது. சுப்பு அதில் நுழைந்து உள்ளே போய்ப்பார்க்க சில அறைகளின் கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. இதற்கென்னசெய்கிறது. இதுகளைத் திறக்கவேண்டுமேயென்று சற்று யோஜித்துப்பார்த்ததில், சுப்பு மனதிற்கு அந்த வீட்டில் ஓர் கொத்து திறவுகோல்களிருந்தது ஞாபகத்திற்கு வந்தது உடனே வீட்டிற்கு ஓடிப்போய் அந்தத் திறவுகோல்களைக் கொண்டுவந்து ஒவ்வொரு திறவுகோலாய்ப் போட்டுப்பார்த்தாள். கடைசியில் ஒரு திறவுகோல்மட்டும் அந்த அறைக்கு சேர்ந்தது. சுப்பு அந்த அறையைத் திறந்ததும் அக்கதவுகளின் குப்பைகளும் அந்த அறையின் குப்பைகளும் இவளை சூழ்ந்துகொண்டன. அந்த அறைகள் திறக்கப்பட்டு 100-வருஷத்திற்கு மேலாகியிருக்கும்போல் தோன்றின. சுப்பு அதன்பிறகு அதற்குள்ளிருந்த மற்ற ஒரு கதவைத் திறக்கப்பார்த்து, பழயபடி எல்லா சாவிகளையும் போட்டுப்பார்த்ததில் ஒரு சாவி சேர்ந்தது. அந்த அறையும் முன் சொல்லிய அறைபோலவே இருந்தது. இப்படி உள்ளுக்குள் உள்ளாக, 5 அறைகளிருந்தன. கடைசி அறையில் சுவற்றில் ஓர் அலமாரியிருந்தது. அது ஊகித்துப் பார்ப்பவர்களுக்குமட்டும் தோற்றுமேயல்லாது. வெளிப்பார்வைக்கு சுவர்போலிருந்தது. சுப்பு அதற்கும் சாவிகளைப் போட்டுப்பார்க்க, ஓர் சாவி சேர்ந்தது. அந்த அலமாரியில் இரண்டு படங்களிருந்தன. அப்படங்களின் பின்னால் ஓர் சிறிய பெட்டி வைத்திருந்தது. அதிலேயே திறவுகோலிருந்தது சுப்பு இதுதான் தகுந்த இடமென்று தன் யஜமானியம்மாளின் கடிதத்தை அப்பெட்டியி

ல் வைத்துப் பூட்டி திறவுகோலை ஓர் படத்தின் பின்பக்கத்தில் ஒருவருக்கும் தெரியாதபடி சொருகிவைத்தாள். பிறகு ஒவ்வொரு அறையையும் பூட்டி வெகு ஜாக்கிரதையாக திறவுகோலை எடுத்துக்கொண்டு வீட்டிற்குவந்து திறவுகோலையும் ஒருவருக்கும் தெரியாதபடி வீட்டில் பரணியில் ஓர் பிறையில் வைத்துவிட்டு தன்னை ஒருவரும் கவனியாமலிருந்த சமயம் பார்த்து மெள்ள சேஷய்யருக்கு ஓர் கடிதமெழுதி, அதை சேஷய்யருடைய அறையில் போட்டுவிட்டு ஒருவருக்கும் தெரியாமல் போய்விட்டாள். போகும்போதே சுப்பு சுவாமி பகவானே என் யஜமானி கடிதம் ஒருவர்கையிலும் அகப்படாமலிருக்கவேணும் என்று பிரார்த்தித்துக்கொண்டே போய்விட்டாள். சேஷய்யர் வெகுநேரம் எங்கேயோ வெளியேபோயிருந்து, பிறகு வீட்டிற்குவந்து பார்க்கும்போது சுப்புவைக்காணோம். எங்கே தேடிப்பார்த்துமவள் அகப்படவில்லை தன் அறைக்குள் வந்துபார்த்ததும் மேஜையில் ஓர் கடிதம் வைக்கப்பட்டிருந்தது. அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்க்க, அதில் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது.

“என் தகப்பனுக்கு சமானமான சேஷய்யரவர்களுக்கு சுப்பு நமஸ்காரம். நான் இன்னும் சிலகாலம் இந்த வீட்டிலிருந்து தங்கம் புக்ககம் போனபிறகு போகலாமென்று இருந்ததில் சுவாமி எனக்கு வீண் அபவாதங்களையெல்லாம் கொண்டுவந்துவிட்டு என்னை சீக்கிரம் புறப்படும்படி செய்துவிட்டார். தாங்களென்னைத் தேடக்கூடாது. நான் எங்கே போயிருக்கிறேனென்பதை விஜாரிக்கவும் வேண்டியதில்லை. என் யஜமானியம்மாள் கொடுத்த ஒரு கடிதத்தையும் உங்கள் வீட்டிலேயே வைத்துவிட்டேன். சுப்பு.” என்று எழுதியிருந்தது. இந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு சேஷய்யர் சுப்பு போனதைப்பற்றி ரொம்பவும் வருத்தப்பட்டார். அவள் என்ன தேடவேண்டாமென்று சொல்லியும் சேஷய்யர் அனேக இடங்களுக்கு ஆள் அனுப்பி விஜாரித்துப்பார்த்தார். சுப்பு எங்கேயும் அகப்படவில்லை. பிறகு சேஷய்யர் வீட்டிற்கு ஒரு சமையல்காரனை திட்டம்செய்து போட்டுக்கொண்டார். கொஞ்சகாலத்திற்குப்பிறகு சேஷய்யருக்கு துக்கத்தால் ஓர் வயிற்றுவலி வியாதி பலமாக பிடித்துக்கொண்டது. வயிற்றுவலி வந்துவிட்டால் அவருக்கு உயிர் போவதே நலமென்றுதோன்றும். சில சமயங்களில்தற்கொலைசெய்துகொள்ளக்கூட பார்த்தார். இதையெல்லாம் பார்த்து காமேசுரய்யர் மனங்கேளாமல் தங்கத்தை தன்வீட்டில் கொண்டுபோய் வைத்துக்கொண்டார். சேஷய்யருக்கு வரவர வியாதி அதிகமாகிவிட்டது. என்ன வைத்யம் பார்த்தும் அனுகூலப்படவில்லை. கடைசியில் காமேசுவரய்யர் பார்த்து மனங்கேளாமல் தன் வீட்டிலேயே சேஷய்யரையும் கொண்டுபோய் வைத்துக்கொண்டு தகுந்த வைத்யன்களை தருவித்துப்பார்க்கச் சொன்னார். வைதிக விஷயமாக சூரிய நமஸ்காரம், அசுவதப்ரதக்ஷிணம் நவக்ரகஜபம் எல்லாம் வைக்கப்பட்டன. சிலர் ஏதாவது கைப்பிசகாயிருக்கலாமென்றும் அதற்கு மாந்த்ரீகனைக்கொண்டு பார்க்கவேண்டுமென்றும் சொன்னார்கள். அந்தப்படியே காமேசுவரய்யர் மாந்த்ரீகனுக்கும் சொல்லியனுப்பிப்பார்த்தார். ஒன்றுக்கும் வியாதி பிடிபடாததைப்பார்த்து கடைசியில் வைத்யன் சேஷய்யர் பட்டணம்போய் உடம்பை பார்த்துக்கொண்டால்தான் சௌக்யமாகுமென்றான். காமேசுவரய்யரும் அதற்கிணங்கி சேஷய்யரை பட்டணத்திற்கு கூட்டிக்கொண்டுபோய் மைலாப்பூரில் தகுந்த ஜாகை யேற்படுத்தி ஓர் பரிசாரகனை வைத்துவிட்டு வைத்யர் ஸ்மித் துரைக்கு தினம் ஒன்றுக்கு 50-ரூ கொடுப்பதாக சொல்லி பார்க்க வைத்துவிட்டு தனக்கு ஊரில் அதிக காரியமிருந்தபடியால், சேஷய்யரை உடம்பை ஜாக்ரதையாய் பார்த்துக்கொள்ளும்படிக்கும் தினம் ஒரு கடிதம் தேகஸ்திதியைப்பற்றி எழுதும்படிக்கும் திட்டம்செய்து ஊருக்குத் திரும்பிவந்தார். காமேசுவரய்யர் சொல்படியே சேஷய்யரும் தினம் ஒரு கடிதம் எழுதிக்கொண்டுவந்தார். உடம்பு கொஞ்சம் அனுகூலமாகவே வருகிறதென்று கடிதத்தால் தெரிய, காமேசுவரய்யருக்கும் சந்தோஷமாயிருந்தது.

(இன்னும் வரும்.)

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.

——()——

MAHABALIPURAM.

# மகாபலிபுரம்.

(68-வது பக்கத்தொடர்ச்சி.)

10. ஒருகல் ரதம்.—மேற்படி ரதங்களுக்கு சற்று தெற்கில் ஒரு பாறையில் வெட்டப்பட்ட கல்ரதம. இதுவும் மேற்படி ரதங்களை அளவில் ஒத்திருக்கிறதென்றே கூறலாம்.

11. ஐந்து கல்ரதம்.—மேற்படி ரதங்களிலிருந்து சுமார் அரைமைல் தூரம் சென்றால் இந்த விநோதமான 5 கல்ரதங்களையும் காணலாம். ஒரு பெரும்பாறையில் வெட்டப்பட்டது. ஒன்று சுமார் 50-அடி நீளமும் 18-அடி அகலமும் 36-அடி உயரமுமுள்ளதாய் நான்குபுறத்திலும் மண்டபம்போன்ற குத்துக்கால்களையுடையதாய் வெகு கம்பீரமாய் விளங்குகிறது. மற்றொன்று 25-அடி சமசதுரமாயும் 50-அடி உயரமுள்ளதாயும் மனிதர்கள் ரதத்தின் உச்சிவரையில் ஏறிச்சென்று பார்த்து வரத்தகுந்ததாயும் வெட்டப்பட்டு வெகு அழகாய் காணப்படுகிறது. மற்ற மூன்று ரதங்களும் சிறியவை. இந்த பஞ்சரதங்களை யல்லது கோபுரங்களையடுத்து

ஒரு யானை, சிங்கம், எருது, இவைகளும் வெகு அழகாய்ப் பாறைகளில் வெட்டி வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை பலர் பலவிடங்களில் உடைத்துத் தகர்த்திருக்கிறார்கள் பூர்வீக சின்னங்களை காப்பாற்ற ஏற்படுத்தப்பட்ட உத்தியோகஸ்தர்கள் இவைகளைக் கவனித்து சிலரிபேர்களைச்செய்திருக்கிறார்களென்றாலும் போதாதென்றே கூறவேண்டியிருக்கிறது.

12. தரைசயனப்பெருமாள்.—இது சமுத்திரக் கரையோரத்தில் சயனித்துக்கொண்டிருக்கிற பாவனையாய் செய்திருக்கிற பெரிய கற்சிலை. இதை மகாபலி சக்கரவர்த்தியின் உருவமென்றும் சிலர் கூறுவதுண்டு.

13. பழயலைட் ஹவுஸ்.—இதுஒரு பெரும்பாறையின்பேரில் கட்டப்பட்ட கோபுரம் போன்ற கட்டடம். இப்பொழுது இதன் பேரில் விளக்குப் போடுவதில்லை. வேறு நூதனமான ஒரு கட்டடம் கட்டி யதன்பேரில் போடப்படுகிறது. ஆயினும் பழைய கட்டடத்தை லைட்ஹவுஸ் உத்தியோகஸ்தர்கள் தங்கள் வசத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

14. பெருமாள் சந்நதி.—ஒரு பெரும்பாறையில் குடைந்து வெட்டப்பட்ட பெரிய மண்டபம். இரட்டை வரிசையான தூண்களையுடையதாயும், ஒருபுறத்தில் ஒருவர் ஸர்ப்பத்தின்மேல் படுத்திருக்கிற பாவனையாகவும், மற்றொரு புறத்தில் எருமை முகத்துடன் ஒரு ஆள் யுத்தகோலமாய் நின்றிருக்கிற பாவனையாகவும், மற்றொரு புறத்தில் கிருஷ்ணன் கோவர்த்தனகிரியை தூக்கிக்கொடையாகப் பிடித்த பாவனையாகவும் வெட்டி வேலை செய்திருப்பது அந்தமும் ஆச்சரியமுமாயிருக்கிறது. இப்படியே வேறு சிற்சில வேலைப்பாடுள்ள இடங்களுமுண்டு. மொத்தத்தில் இந்து தேசத்திலுள்ள பற்பல பூர்விகமான ஸ்தலங்களிலுள்ள சிற்ப சாஸ்திர சாமர்த்தியத்தைக் காட்டுகிற சின்னங்களில் இதை முதன்மையான தெனக் கூறலாம். ஒரே கல்லில் ஒரு கோபுரத்திற்கு அவசியமான ஒவ்வொரு அங்கங்களையு மமைத்து இவ்விடத்தில் செய்திருப்பதுபோல எந்தவிடத்திலுமில்லை.

இந்தஸ்தலத்திற்கு மல்லாபுர க்ஷேத்திரமென்றும் கூறுவதுண்டு. இஸ்தலபுராணம் தமிழ் பாஷையில் அச்சடிக்கப்பட்டு இந்த தேவஸ்தானம் தர்மகர்த்தா மிஸ்டர் சீனிவாசராகவய்யங்காரவர்களால் குறைந்த விலையாகிய ஒரு அணாவிற்கு விற்கப்படுகிறது. இந்த ஊரில் நல்ல அரிசி, பருப்பு முதலியவைகளாவது பால், தயிர், நெய் முதலியவைகளாவது கிடைப்பது கஷ்டம். வாசத்திற்குத் தகுந்த வீடுகளும் கிடைப்பது அரிதாகையாலும், தேகத்திற்கு ஆரோக்கியமானவிடமாய்த் தோற்றப்படாததாலும், யாத்திரைக்காரர்கள் உடனுக்குடனே திரும்பிவிடுகிறார்கள். இந்த ஊரில் செய்திருக்கப்பட்ட கல்வேலைகள் இன்னகாலத்தில் இன்னாரால் செய்யப்பட்டதென்று வியக்தமாய் தெரியவில்லை. ஆயினும் ஒருகாலத்தில் இந்த ஊர் அதிகபிரபலமடைந்த அரசரால் ஆளப்பட்டதாகவும், அப்பொழுது இந்த ஊர் பதினோரு சதுரமைலில்விஸ்திரணமுள்ள பட்டணமாயிருந்ததாகவும் தெரியவருகிறது. பூர்வத்தில்புண்டரீகரிஷி என்றபக்தர் திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கிற மகாவிஷ்ணுவை பிரத்தியக்ஷமாய் தரிசிக்க எண்ணங்கொண்டு இவ்விடத்திற்கு வந்து சமுத்திரத்தினால் தடை பட்டவராய் திகைத்து, சமுத்திர நீரை இறைத்து மேற் செல்லக் கருதி ஒரு வருஷகால மிறைத்த தாகவும், கடவுளே இவருக்கு உதவியாளாக வந்துதாமும் கொஞ்சமிறைத்து தண்ணீரைவடியச் செய்ததாகவும் பிறகு பக்தனுடைய அன்பிற்குவந்து பிரத்தியக்ஷமாய் தரிசனமீந்ததாகவும், புண்டரீகரிஷி ஆனந்த பரவசராய் பரமயோகிகளுக்கும் கிடைப்பதற்கரிதான இந்த சயனதரிசனத்தை இப்படியே யிருந்து யாவருக்கும் சாதித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க க்ஷீராப்திநாதன் அவர் வேண்டுதலுக்கிசைந்து நாளது வரையில் அத்திவ்விய ரூபத்துடன் தரிசனம் தருவதாகவும் கூறப்படுகிறது. யாத்திரைக்காரர்கள் இவ்விடத்தில் சமுத்திர ஸ்னானம் விசேஷபலனைக் கொடுக்கத் தக்கதென நம்பிசெய்கிறார்கள். சங்கல்ப மந்திரம் முதலியவைகளைச்சொல்லி வைத்து தட்டுப்பறிக்கிற பிராமணர்கள் இவ்விடத்தி லில்லை.

சி. டி. வேங்கடரமண அய்யர்.

## SHORT STORY.

## "SIVASAMBAN."

## சிவசாம்பன்.

இஃது ஓர் செழிப்பான கிராமம். இதையடுத்து காவேரிநதியின் ஓர் கிளை பாய்கிறபடியால் நஞ்சை பூமிகளும், தென்னை கமுகு முதலிய தோப்புகளும் கண்களுக் கெட்டிய தூரம் பரந்து, நீர்வளம் நிலவளம் பொருந்தி, குடிகள் பொருளாதார முள்ளவர்களாயும், கஷ்டமென்பதையே யறியாதவர்களாயும், திடகாத்திரதேகமுடையவர்களாயும் குதூஹல முள்ளவர்களாயு மிருந்தார்கள். இதில் பற்பலஜாதியார்களிருந்ததன்றி, பிள்ளைகளுக்கு வேண்டிய அளவு கல்வியைக் கற்பித்து சர்க்கார் உத்தியோகத்தையே தமது குலத்தொழிலாக்கிக் கொள்ளக் கருதி, கடன் பட்டாவது, யாசகஞ்செய்தாவது தமது பிள்ளைகளை கற்பிக்கவேண்டுமென்ற பேரவாக்கொள்ளும் பார்ப்பினருமில்லாமற் போகவில்லை.

எதேஷ்டமான பூஸ்திதிகளை யுடையவர்களும் தம் மக்களை கல்வி பயிலவிட்டு, ஐகோர்ட் வக்கீலாகவும், டிப்டிகலெக்டராகவும், சப்ஜட்ஜீயாகவும் பார்க்க அவாக்கொண்டவர்களாய் செலவிடுவதைக் கண்ட, மத்தியதரஸ்திதிகளையுடையவர்களும், ஏழைகளும் அதே நோக்கமுள்ளவர்களாய் தம்குமாரர்களையும் உத்தியோகத்தின் பொருட்டாகவே கல்விகற்பிக்கத் தொடங்கினார்கள். பலர் தமது பூமிகளையும் வீடுகளையும் ஒவ்வொன்றாக விற்று தமது செல்வச்சிறுவர்களை தென்னிந்தியா கேம்பிரிட்ஜ் என்ற பட்டணத்திற்கு அனுப்பி கல்விச்சாலையில் படிப்பித்து வந்தார்கள். இதில் போட்டா போட்டியதிகரித்து: ஒருவர் என் குமாரனை பி. எ. வரையில் ஒரு கை பார்த்துத்தான் விடுவேனென்பார்கள். மற்றொருவர் ஆஸ்திபோனாலுஞ் சரி, பாஸ்திபோனாலுஞ் சரி, என் மகனை பி. எல். வரையில் படிப்பிக்காமல் விடேனென்பார். வேறொருவர் தன் மைந்தனை பெரிய இஞ்சினீர்வேலைகிடைக்கத்தகுந்த பி. சி. இ. பரீக்ஷைவரையில் பிடிப்பித்தே தீருவேனென்பார்.

இவர்களில் மத்தியதரவகுப்பைச் சேர்ந்தவரும், நமது கதாநாயகர் சிவசாம்பனுடைய தந்தையுமாகிய லோகநாதய்யர், தனது ஒரே செல்வ புத்திரனை சிவசாம்பனை பிரவேசபரீக்ஷையில் தேற்றுவதற்குவேண்டி தமது வீட்டின் பேரில் 500 ரூபாய் கடன் வங்கினார். அவனும் அப்பரீக்ஷையில் முதல் வகுப்பில் தேறவே எப். எ. க்குப்படிப்பதாயிருந்தால் பாடசாலையில் சம்பளமின்றி சேர்த்துக் கொள்வதாக தலைமை உபாத்தியாயர் சம்மதித்தனர். லோகநாதய்யருக்கு ஆசையதிகரித்தது. பையனை எப். எ. க்கும் படிப்பித்தனர். இதற்கு தொகையதிகமாக வேண்டியிருந்ததால், கையில் பணமின்றி தமது நஞ்சை பூமியை விற்று இந்திய கேம்பிரிட்ஜிலிருக்கும் தமது குமாரனுக்கு வேண்டிய வரையில அப்போதைக்கப்போது பணம் அனுப்பிக் கொண்டு வந்தார். எப். எ. பரீக்ஷைக்கு பணம் கட்டும் காலம் நெருங்கிற்று. சிவசாம்பன் ஓட்டலுக்குக் கொடுக்கவேண்டிய தொகைக்கும் பரீக்ஷை கட்டணத்திற்கும் 50 ரூபாய் அனுப்பும்படி இரண்டு கடிதம் எழுதியும் லோகநாதய்யர் பதில் எழுதவில்லை. பிரவேச பரீக்ஷைக்கு வீடும் எப். எ. க்கு பூமியும் தீர்ந்தது. கடன் வாங்க எண்ணங்கொண்டு பலரிடம் சென்றனர். "தங்கள் குமாரனுக்கு இஸ்கூல் சம்பளம் கூட இல்லையாமே. இந்த வருஷத்தில் எப். எ. பரீக்ஷையும் முதல் வகுப்பில் தேறுவான். பி. எ. க்குப் படிக்க உபகார சம்பளமும் கிடைக்கும் ஒரு வேலைக்குச் சேர்ந்தாலும் 60-80. வாங்குவான், இனி உங்கள் கஷ்டம் தீர்ந்தது" என்று சிலர்கூறினார்கள். ஒரு பைசாகூடக் கிடைக்காதபடியால் குமாரனுக்கு பதில்கூட எழுதவில்லை.

சிவசாம்புன்—"இன்று சனி, நாளை ஞாயிறு, பன்னிரண்டு மைல் தூரத்தைப் பார்த்தால் திங்கள் கிழமை பணம் கட்டமுடியாது. கிராமத்திற்கு சென்று தாய் தகப்பனைக் கண்டு தொகை பெற்று வருவோம்," என்பதாக சனி அதிகாலையில் தனது இஷ்டர்களிடம் சொல்லிக்கொண்டு புறப்பட்டான.

குடிமங்கலத்தில் லோகநாதய்யர் தனது மனைவியைப்பார்த்து:—

"என்னடி! சிவசாம்பனிட மிருந்து இரண்டு கடிதம் வந்துவிட்டது. திங்கட்கிழமை பரீக்ஷைக்குப் பணங்கட்டுகிறதினமாம். மெட்ரிகுலேஷனுக்கு வீடு போயிற்று. எப். எ. முடிவதற்கு முந்தியே பூமியும் தொலைந்தது. யாரைக்கேட்டாலும் நமது பையன் பேரில் பொறுமை கொண்டு கடன் கூடக்கொடுக்க மாட்டேனென்கிறார்கள். இந்தப் பரீக்ஷையில் எப்படியாவது தேறிவிட்டானானால் 50. 60-க்குக் குறையாமல் எங்கேயாவது வேலைக்கு அமர்த்திவிடலாம். உன்னிடம் எதாவதுண்டானால் கொடுக்கிறாயா? இல்லாவிட்டால் பையன் படிப்பை நிறுத்தி விடவேண்டியது தான்."

மனைவி:—"என்னிடம் இன்னும் என்ன இருக்கிறது. முந்தியே என் தாயார் வீட்டில்போட்ட கம்மலை கொடுத்தேன். பிந்தி கழுத்தில் கட்டிக்கொண்டிருந்த சரட்டட்டிகையையும் பிடுங்கிக்கொண்டு போய் விட்டீர்கள். ஒவ்வொருவரைப்போல வீட்டுப்பண்டங்களை விற்று சிறுபாடுசேர்த்து நான்கையில் வைத்துக்கொண்டா இருக்கின்றேன். சில்லரை நகைகளையும் ஒவ்வொன்றாக விற்று படிப்பு, படிப்பு என்பதாக கொடுத்து விட்டீர்கள். உங்களை யறியாமல் என்னிடத்தில் ஒரு பைசா கூட கிடையாதே. அவன் சம்பாதித்துப் போட்டுநாம் சாப்பிடப்போகிறது தெரியாதா! என்னவோ கடன்! நடேசன் பிள்ளைபோல் இவனும் எப்பொழுது கிறிஸ்து வேதத்தில் சேருகிறானோ! நீங்கள் படித்துத்தானா இந்த வீடு பூமி முதலியவைகளை யெல்லாம் சம்பாதித்தீர்

கள். நீங்கள் செய்து வந்ததுபோல அவனும் சொந்தப்பண்ணையுஞ் செய்துக்கொண்டு வந்தால் போதாதா? அப்படித்தான் ஏராளமாய் சம்பாதித்து யாருக்குவைக்கவேணும்? நமக்குள்ளவனே ஒருத்தன். அவனைத்தனியாக வேறு இடத்தில் விட்டு விட்டு, நாம் இங்கே யிருக்கிறதில் என்ன சுகம். குழந்தைக்கு தலை கால் வலித்தது, யாரவனுக்குதவி? உடனே கடிதமெழுதி புறப்பட்டு வரச்சொல்லுங்கள்."

இவர்கள் இவ்விதம் பேசிச்கொண்டிருக்கும் பொழுதே சிவசாம்பன் உள்ளே பிரவேசித்து தாய் தகப்பன் கால்களில் விழுந்து நமஸ்கரித்தான்.

சிவசாம்பன்:—ஏனப்பா! கடிதம் கூட எழுதவில்லை.

லோகநாதய்யர்:—கையில் காசில்லை. அதினலே தான் விழிக்கிறேன்.

சிவசாம்பன்:—இந்த சமயத்தில் காசில்லையென்றால் என்ன செய்கிறது? இந்த வருஷம் எப்படியும் பரீக்ஷையில் தேறிவிடுவேன். எப். ஏ. தேறிவிட்டால் எங்கேயாவது ஒரு வேலைக்கு பிரயத்தனஞ் செய்து அமர்ந்து விடுகின்றேன். பிந்தி உங்களுக்கு இந்தக்கஷ்டம் வேண்டாம்.

தாயார்:—சிவசாம்பா! நீ முந்தி ஸ்நானஞ்செய்து சாப்பிடவா. எங்கேயாவது உங்கப்பா போய் கடன் வாங்கிக்கொண்டுவந்து கொடுக்கட்டும்.

சிவசாம்பனும் ஸ்நானஞ் செய்யப்போனன். லோகநாதய்யர் மறுபடியும் யாரையாவது கடன் கேட்கலாமென்று வெளியே போனர்.

சற்று நேரத்திற்கெல்லாம் தந்தை வீட்டுக்குத் திரும்பிவந்து சிவசாம்பா! கேட்காத விடமெல்லாம் கேட்டேன், முட்டாத விடமெல்லாம் முட்டினேன் என்ன செய்கிறது.

"அகப்பட்டுதோ ? இல்லையோ ?"

"இந்த வருஷம் கிடக்கட்டும், வருகிறவருஷம் பார்த்துக் கொள்வோம்." "இந்த வருஷம் கிடக்கட்டுமா? இந்த வருஷம் நான் கஷ்டப்பட்டு படித்ததுபோல் இதுவரையில் எந்த வருஷமும் படிக்கவில்லை. பரீக்ஷைக்கு அனுப்புவதற்காக பாடசாலையில் செய்யப்பட்ட பரீக்ஷையில் நான் தான் முதலாகத் தேறினேன். அப்படியிருக்க இந்த வருஷம் வேண்டாமென்றால் என்மனம் கொதிக்கின்றதே, பணமில்லாததால் இன்ன பையன் பரீக்ஷைக்கு வரவில்லை என்று கூடப்படிப்பவர்கள் என்னை கேலிசெய்வதைக்கேட்டுக் கொண்டிருப்பதை விட பிராணனையே விட்டுவிடலாமே.

பிராணம் க்ஷணபங்குரம்,

மானமோ ஆசந்திர தாரசமானது."

என்று சொல்லிவிட்டு யோஜிக்கலானன்.

"அவனன்றி அணுவுமசையா. ஆ! இச்சமயத்தில் எனக்கு பணமில்லாமற் செய்தவர் கடவுளே. அவர் என்னை ஏன் இவ்வளவு தூரம் படிக்கும்படிசெய்து கடைசியில் கைவிட நினைத்தார்? அதற்கும் காரணமிருந்தேயிருக்கும். அவரை அநாதரக்ஷகரென்கிறார்களே? எப்படி? இப்பொழுதுஎன்னை அநாதையாக்கியவர் அவராகவிருக்க, அவரை அநாதைரக்ஷகரென்று கூறுவது எங்ஙனம்? ஆனல் நான் அநாதையாகவிருக்கின்றேன், என்னை ரக்ஷி என்பதாக நான் அவரை நேரில் கண்டுகேட்டு, அவர் என்னை ரக்ஷிக்காவிட்டாலன்றோ நான் அவரை ரக்ஷகரல்லவென்று கூறலாம். சரி, நாம் வரும்வழியில் ஒருபெரியகாடும் அதன் நடுவில் ஒரு ஆலமரமுமிருந்ததன்றோ? அங்கேசென்று, இனிது இனிது யேகாந்த மினிது என்றபடி தனியாகவிருந்து பகவானைக்கண்டு நமது சந்தேகத்தை தீர்த்துக்கொள்வோம்" என்று யோஜனையை முடிவுசெய்துக்கொண்டு:—

அம்மா! அப்பா! நான் தென்னிந்தியா கேம்பிரிட்ஜ்க்குப்போய் என் கூட்ப்படிக்கும் பிள்ளைகளில் சிலரை எனக்கு உதவி செய்யும்படியாகக்கேட்டு பணத்தைக்கட்டி பரீக்ஷைக்குப் போகின்றேன். பிறகு ஈசன் செயலென்று கூறிவிட்டு புறப்பட்டான்.

தாய்:—சிவசாம்பா! நீ போகவேண்டாம். உன் கூடப் படிக்கப்பட்டவர்களெல்லாம் பரீக்ஷைக்குப்பணம் கட்டவும், நீ யவர்களைக்கேட்டு அகப்படாமற் போகும் பக்ஷத்தில், உனக்கு அவமானமாகவிருக்கும். நீயோ அவமானத்தைச் சற்றும் சகிக்கமாட்டாய். பிறரை நம்பிப்போவது சரியானதன்று, போக வேண்டாம், நின்று விடு.

சிவசாம்பன்:—அம்மா! இல்லை, எனக்கு கடவுள் கிருபை செய்வார். அவருடைய பரிபூர்ணமான கிருபை எனக்குண்டாகும்படி நீ ஆசிர்வாதம் பண்ணு. தடைசெய்யாதே.

தாய்:—நல்லது, அப்பனே! உனக்கு பகவான் கிருபை செய்வார், போய்வா.

சிவசாம்பன் மூன்றுமைல் தூரம் சென்று குறித்த வனத்தையடைந்து, பிர்மாண்டமான ஆலவிருக்ஷத்தினடியிலமர்ந்து பகாவனை நேரில் காண்பதற்கு இதுவே தகுந்த விடமென்றுன்னி அவரையே சிந்தித்துக்கொண்டிருந்தனன். குளிர்ந்த காற்றுவீசிற்று. பூர்ணசந்திரன் உதயமாயினன். மனுஷ்ய அரவமென்பதேயின்றி உம் என்ற மெல்லிய காற்றின் ஓசையை ஸ்ருதியாகக்கொண்டு பக்ஷி ஜாதிகள் பாடவும், இவனுக்கு குதூஹலமதிகரித்து, மெய்மறந்து ஆநந்த பரவசனகி, அரனே! திரிபுரனே! சங்கரனே! கங்காதரனே! பராபரனே! என்று வாய்விட்டுக் கூவினன். தன் முன்னல் ஏதோவொன்று கிர் என்ற சப்தத்துடன் வருவதாக தோற்றி கண்களைத்திறந்து பார்த்தான். காற்றினல் அடித்துக்கொண்டு வரப்பட்ட ஒரு காகிதத்துண்டு அவன்காலண்டை கிடந்தது. அதையெடுத்து விரித்து சந்திரிகையின் வெளிச்சத்தினல் படித்தான்.

"தேடரிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே,
தேசோமயாநந்தமே."

என்றதாயுமானவர் பாடலின் ஓரடியை எழுதிய கடிதம். "இந்த அடிகளை கொண்டு முடியும் பாடல் கவனத்திற்கு வரவில்லை."

தன் இனிமையான குரலால்.—

"இனியே தெமக்குனருள் வருமோ வெனக்கருதி
எங்குதே நெஞ்சமையோ,
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே,
அனியாயமாயிந்த வுடலை யானென்று வரும்
அந்தகற்காளாகவோ,
ஆடித்திரிந்து நான் கற்றதுங் கேட்டதும்
அவலமாய்ப் போனதன்றோ,
கனியேனும்வறிய செங்காயேனு முதிர் சருகு
கந்த மூலங்களேனும்,
கனல்வாதை வந்திடினள்ளிப் புசித்து நான்
கண்மூடி மௌனியாகி,
தனியேயிருப்பதற் கெண்ணினேனெண்ணமிது
சாமி நீ யறியாததோ,
சர்வ பரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதா நந்த சிவமே,"

"இந்தப் பாடலல்ல"

2"தந்தை தாய் தமர் தாரமகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேகமில்லை மணிமாட மாளிகை மேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வு மோரிந்திரசால கோலம் !
வஞ்சனை பொறாமை லோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்த மல பாண்டமோ
வஞ்சனை யிலாத கனவே!
எந்த நாளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
இரவு பகலில்லாவிடத்
தேகமாய் நின்ற நின்னருள் வெள்ளமீதிலே
யானென் பதறவுமுழுகிச்
சிந்தைதான் றெளியாது சுழலும் வகையென்
தேடரிய சத்தாகியென் [கொலோ
சித்தமிசைகுடி கொண்டவறிவான தெய்வமே
தேசோமயாநந்தமே."

என்று மனதுருகிப்பாடினன். கா, குவென்று கத்திக் கொண்டிருந்த பக்ஷிகளும் இவனது இனிய குரலைக்கேட்டு மௌனமாய் செவிசாய்த்தன.

"என்னுடைய சித்தத்தில் குடிகொண்டிருக்கப்பட்ட தேசோமயாநந்தமாகிய தெய்வத்தை யானறியவில்லை யல்லவா" என்று இரவு பன்னிரண்டு மணிவரையில் தன்னுடைய பஞ்ச பூதங்களையும் ஒரே நிலையில் நிறுத்தி அசைவற்றிருந்தனன். உடனே அவனது மனக்கண்ணிற்கு ஒரு திவ்விய ஜோதி தோன்றிற்று. அதையானந்தமாய் தரிசித்துக்கொண்டு வெகுநேரமிருந்தனன். பிறகு அவனது உடல் சிலிர்த்து, பலதடவை நடுங்கி, கொட்டாவி விட்டு மரத்தின் வேர்களின்பேரில் சாய்ந்து,

"ஆகாசலிங்கத்தைக் கண்டேன்டியங்கே
யாருமறியாமல் நின்றேன்டி
எகாந்தமாக விருந்தேன்டி மன
தேக்கந்துலைந்தது பாருங்கடி."

"சித்தஞ்சிதம்பரமாச்சுதடி, முன்
செய்த வினைகளெல்லாம் போச்சுதடி
சுத்தப்பிர்ம மயமாச்சுதடியதைச்
சொல்லத்தெரியுமோ பாருங்கடி."

என்ற கும்மியை வாயில் பாடிக்கொண்டு எழுந்து குதித்தான். கண்களில் தாரை தாரையாக நீரைப் பெறுக்கினன்.

சூரியன் உதித்தது. உலகப்பற்றுகளை அடியோடொழிந்த சந்நியாசியாகி, தான் உடுத்திக்கொண்டிருந்த வஸ்திரங்களை வழியில் சந்தித்தவர்களுக்குக் கொடுத்து கோவணாண்டியாய், மானபிமானத்தை விட்டு, கண்டவர் கொடுத்தவைகளைத்தின்று, கிடைக்காத தினங்களி லுண்டாகும் பசிவேதனையின்றி, பற்பல ஊர்களைக்கடந்து சிற்சில க்ஷேத்திரங்களில் தங்கி கொங்கேழு சிவஸ்தலங்களில் ஒன்றாகிய தாடிக்கொம்பு என்ற திவ்வியஸ்தலத்தை யடைந்து சிவகைங்கரியங்களைச் செய்துக்கொண்டிருந்தனன். இவருடைய வைராக்கியத்தைக் கண்ட பலர் இவருக்கு அன்னபானாதிகளை யுதவிக்கொண்டு வந்தனர். சில சமயங்களில் 8-10 நாள்வரையில் ஆகாரமின்றியே இருந்தனராம். வருஷம் நான்கு சென்றது.

லோகநாதய்யர் தன் குமாரன் சந்நியாசியானதும் தெரியாதபடியால் தென்னிந்தியா கேம்பிரிட்ஜிக்குச்சென்று விசாரித்து, தப்பு அகப்படாமல் பல ஊர்களை வீணுகச்சுற்றித்திரிந்து குடிமங்கலம் சேர்ந்து புத்திர சோகமடைந்து காலங்கழித்தார்.

தாடிக்கொம்பில் ஒருநாள், சிவாலயத்திற்கு ஒரு உத்தியோகஸ்தர் வந்தார். அவரோடு அவர் மனைவியும் குழந்தைகளும் வந்தார்கள். உத்தியோகஸ்தர் மனைவி நமது சிவசாம்பஸ்வாமிகளை சற்று உற்று நோக்கினள். உத்தியோகஸ்தர் தம்மனைவியை நோக்கியவனை நீன் அவ்வளவு குறிப்பாய் பார்க்கிறாய் என்றனர்.

அவரைப்பார்க்கும் பொழுது முந்தி பார்த்தமுகம் போலிருந்தது. எங்களூரில் லோகநாதய்யர் என்று ஒருவருண்டு அவரை யுங்களுக்குத்தெரிந்திருக்குமே! அவர் குமாரன் சிவசாம்பன் என்ற பையன் சிலவருஷங்களுக்கு முந்தி எங்கேயோ போய்விட்டான். எப். ஏ-க்குபணங்கட்ட தகப்பனார் தரித்

திரத்தினால் பின்வாங்கினவராய் மறுவருஷம் பரீக்ஷைக்குப்போகலாமென்று சொன்னார். அன்றுபோனவன் இதுவரையில் கிடைக்கவில்லை. இந்த மனுஷனைப் பார்த்தால் அந்த லோகநாதய்யருடைய குமாரன்போல் தோற்றுகின்றது என்றனள்.

"மெடிரிகுலேஷன் பாஸ்செய்து எப். ஏ. வரையில் படித்தவனா இப்படி இருப்பான்? உனக்கு தாய் வீட்டு ஞாபகம்போல் தோற்றுகிறது."

"இல்லவே இல்லை. அவன் சிவசாம்பனே, நீங்கள் தான் அவனை விசாரியுங்களேன்."

"நல்லது விசாரிக்கலாம். முந்தி சுவாமி தரிசனஞ்செய்துக்கொண்டு வருவோம்"

உத்தியோகஸ்ருதம் அவர் மனைவியும் பேசியவைகளை கவனித்த சிவசாம்பஸ்வாமிகள் உடனே தான் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு நீங்கி வேறு ஒரு மறைவான இடம் போய் உட்கார்ந்துக்கொண்டிருந்தார்.

அவர்களும் ஸ்வாமிதரிசனஞ்செய்து விட்டு இவரைவந்து பார்க்கக் காணாதவர்களாய் ஆலயத்தை பிரதக்ஷணஞ்செய்யச் சென்றார்கள். வடகோடி மூலையிலுள்ள ஓர் மாத்தடியில் இவரைக்கண்டு,

உத்தியோகஸ்தர்.—நீர் எவ்வளவு வருஷமாய் இவ்விடத்திலிருக்கிறீர்?

ஸ்வாமி :—இக்கூண்டில் பிரவேசித்து சுமார் 25 வருஷமாயிற்று.

உத்தி :—நான் கேட்பது அதுவல்ல, இந்த ஊருக்கு வந்து எவ்வளவு காலமிருக்கும்?

ஸ்வாமி :—ஐந்து வருஷத்திற்கு அதிகமாகவேயிருக்கும். பிராரத்தம் இன்னும் விடவில்லை.

உத்தி.—உமக்கு தேகத்தின் பேரில் அவ்வளவு வெறுப்பு வருவானேன். உம்மை இன்னொன்று அறிய விரும்புகின்றேன். தகப்பன் பேரையும் ஊரையும் கூறினால்போதுமானது.

ஸ்வாமிஇதற்கு ஊரேது, பேரேது. பெற்று வளர்த்து வாலிபஞ்செய்த தகப்பனுக்கும் தாய்க்கும் கணக்கில்லை. பலதடவை இராஜ குமாரனாகவுமிருந்தேன். சிலதடவை கிராமதலையாரி மகனாகவுமிருந்தேன். நாற்காற்பிராணியாகவும்பிறந்ததுண்டு. உத்பீஜமாக ஜன்மமெடுக்காமலுமிருக்கவில்லை. மாஞ்செடிகளாகவுமிருந்தேன். அப்பொழுதெல்லாம் தாயும் தகப்பனுமுண்டு. உத்தமமென்று கூறும் இம்மானிட ஜன்மத்தில் தான் ஆசை, பாசம், மானம், அபிமானம், பொறாமை, மோசம், பொய், அகங்காரம் முதலிய ஞான சூன்யஞ்செய்கிற குணங்கள் அதிகமாகப்பற்றிக்கொண்டு வருத்துகிறதென்பதையறிந்தேன். மற்ற ஜன்மங்களில் இவைகளினுடைய பாதையவ்வளவாகவில்லை. இதையறியவே, மாயை தொலைந்து நேடரிய சத்தாகியென் சித்தமிசைகுடிகொண்ட அறிவேயான தேசோமயானந்தமான தெய்வமாகிய தகப்பனுக்குற்ற, பிள்ளையானேன். அவரை இப்பொழுது எங்கும் பார்க்கின்றேன். மறுபடியும் நீர் கேட்பதற்குண்டோ?

உத்தி:—நீர் பூர்ணவேதாந்தி என்பதை யறிந்துக்கொண்டேன். ஆயினும் குடிமங்கலம் லோகநாதய்யர் குமாரன் சிவசாம்பய்யர் என்று நினைத்து உம்மிடம் இவ்வளவு தூரம் பேசத்துணிந்தேன். இன்னும் என் சந்தேகம் தீரவில்லை. நீர் ஒப்புக்கொண்டால் போய்விடுகிறேன். என்னிடம் கோபம் கொள்ள வேண்டாம் தயவுசெய்து கூறவேண்டும்.

ஸ்வாமி:—நீர் கூறியதில் உண்மை யில்லாமற் போகவில்லை. எனது அன்பே சிவசாம்ப ஸ்வரூபம் தந்தையாகிய லோகநாதனிருப்பது மங்களமான விட மென்பதற்கு சந்தேக முண்டோ? ஆயினும் ஒன்று கூறத்துணிந்தேன். நீர் எந்த லோகநாதய்யருடைய குமாரனைப்பற்றி அதிக அன்பாயும் ஆவலாயும் விசாரிக்கிறீரோ அவன் தாய் பரலோகம் சென்ற சங்கதி யுங்க்குத் தெரியாதாயினும், ஆதிசங்கரும் அன்போடு செய்த காரியமாகிய தாய்க்கடனை, அவனுஞ்செய்து தீர்த்து நேற்றுத்தான் இவ்விடம் வந்தான்.

உத்தி:—ஆ! ஆ!! அப்படியா! நீர் கூறுவது உண்மைதானா? உமக்கு சங்கதி எப்படி தெரிந்தது.

ஸ்வாமிகள் மௌனமாயிருந்ததன்றி கண்களையும் மூடிக்கொண்டார்.

உத்தியோகஸ்தர் தான்வந்த காரியத்தை முடித்துக்கொண்டு மனைவிக்குத் தாய்வீடாகிய குடிமங்கலத்திற்கு வந்தார். லோகநாதய்யர் மனைவி இறந்துபோனது வாஸ்தவமென்று தெரியவந்தது. மைத்த சங்கதிகளையும் விசாரிக்கும் பொழுது, அவள் இறந்ததினத்தில் ஒரு பரதேசி, வீட்டு வாயிலில் வந்து காத்துக்கொண்டேயிருந்ததாகவும், சுடுகாட்டுக்கும் அப்பரதேசி பிரேதத்தைத் தொடர்ந்து வந்ததாகவும், பிரேதத்தின் பேரில் லோகநாதய்யர் நெருப்பை வைக்கப்போகும் பொழுது, அதைப்பிடுங்கி தன்கையால் பிரேதத்தின் பேரில் போட்டுவிட்டு ஓடிவிட்டதாகவும், அவனைப்பின் தொடர்ந்து ஓடிய சிலர் அவன் மறைந்து சென்றதைக்கண்டு திரும்பி வந்ததாகவும் தெரியவந்தது. உத்தியோகஸ்தர் தான் தாடிக்கொம்பில் கண்ட மனிதனைப்பற்றி லோகநாதய்யரிடம் கூறினார்.

லோகநாதய்யருக்கு, அன்று நெருப்பைத்தன்கையிலிருந்து பிடுங்கி சவத்தின் பேரில் போட்டுவிட்டு ஓடிய பரதேசி தனது குமாரன் சிவசாமபன் என்பதாக உறுதிப்பட்ட படியால், அவனை எப்படியாவது பார்க்கவேண்டுமென்ற எண்ண முள்ளவராய் தன்னிடமிருந்த சொத்துக்களை விற்று பொன் நாணயமாக்கி, இடையில் கட்டிக்கொண்டு குடிமங்கலத்தைத்துறந்து, தாடிக்கொம்பு என்ற க்ஷேத்திரத்தை யடைந்து ஒரு வருஷகாலமிருந்தும், குமாரனைக்காணாதவராய் சந்யாசி வேஷம்பூண்டு தன்குமாரனைக் கண்டு பிடிக்க வேண்டுமென்ற வாஞ்சையினால், பல

க்ஷேத்திரங்களை சுற்றிப்பார்த்துக்கொண்டு ஸ்ரீகாசிமாநகர் சேர்ந்தனர். 'ஏ! கங்காதேவி! உன்னிடத்தில் ஸ்நானஞ் செய்கிறவர்களுடைய சகல பாவங்களையும் போக்கி, எண்ணங்களை நிறைவேற்றுவது சத்தியமாக விருந்தால், இந்த திவ்விய க்ஷேத்திரத்தில் என் குமாரனை யான்காணும்படி செய்வாயாக!' வென்று பிரார்த்தனை செய்துக்கொண்டு பலதடவை முழுகினர். 64 கட்டங்களிலுமுள்ள பல ஆலயங்களிலும், சத்திரங்களிலும் மடங்களிலும் தேடினர். யாதொரு குறிப்புங் கூடகிடைக்கவில்லை. இப்படி இரவு பகலென்பதின்றி நான்கு வருஷகாலம் சுற்றியலைந்தபடியால் மெய்தளர்ந்து முகம்வாடி எப்பொழுது ஓரிடத்தில் சற்று படுத்திருப்போமென்ற எண்ண முள்ளவராய் கேதார கட்டத்திலுள்ள கேதாரேஸ்வரர் ஆலயத்தில் ஒரு நாள் இரவு தங்கினர்.

"கங்காதேவியோ நமது பிரார்த்தனைக்கு பலன் கொடுக்கவில்லை. இனி நம்மால் நடந்து அலையவும் சக்தியில்லை. தேகத்தில் உயிரானது தாமரையிலையில் தண்ணீர்போல் தவிக்கின்றது. சிவசாம்பா! உன்னை நான் இனி காண்பது சமீபத்திலிருக்க வேண்டும். இல்லையாயின் இந்த ஜன்மத்திலில்லை" என்று சொல்லிக்கொண்டு ஓர் மூலையில் உட்கார்ந்தார்.

சந்தியா காலமாயிருந்தபடியால் ஆலயத்தில் வாத்திய கோஷத்தோடு வெகு விமரிசையாய் பூஜை நடந்துக்கொண்டிருந்தது. நூற்றுக்கணக்கான ஜனங்கள் ஸ்வாமிதரிசனத்திற்கு வந்துபோய்க்கொண்டிருந்தார்கள். சுமார் ஒன்பது மணிக்கு பூஜைமுடிந்து ஜனக்கூட்டமும் குறைந்தது.

சந்நியாசி வேடம்பூண்ட லோகநாதய்யரிருந்த மேடையில் சில சந்நியாசிகள்வந்து தங்கள் காஷாயங்களை விரித்துப் படுத்துக்கொண்டார்கள். இவருக்கு சமீபத்தில் இருவர் படுத்துக்கொண்டிருக்க, அவர்களை யடுத்து ஒருவர் உட்கார்ந்துக்கொண்டேயிருந்தார்.

சமீபத்தில் படுத்துக்கொண்டிருக்கிறவர்களைப் பார்த்து லோகநாதய்யர் சுவாமிகளே! நீங்கள் எந்த ஊரென்று இரண்டு மூன்று தடவை கேட்டனர். படுத்துக்கொண்டிருக்கிறவர்கள் பாஷை தெரியாததாலோ, உறக்கத்தினாலோ, அலக்ஷியத்தினாலோ, வேறு யாது காரணத்தினாலோ பதில் கூறவில்லை. உட்கார்ந்திருந்தவர்:—

"உம்மையும் என்னையும் போன்ற சந்நியாசிகளுக்கு சொந்த ஊருமுண்டோ? நீர் ஊர், பெயர் விசாரிப்பதைப் பார்த்தால் சந்நியாசம், மேல்வேஷமேயன்றி யாதொன்றையும் விட்டவரல்ல வென்று தோற்றுகின்றதே. உம்மோடு வார்த்தையாடுவதும் துன்பத்தை யுண்டாக்குமென்று பயப்படவேண்டியன்றோ இருக்கின்றது."

லோகநாதய்யர் உடனே எழுந்து அவர் சமீபத்திற்குச்சென்று உட்கார்ந்தனர். தமிழ் பேசும் சந்நியாசி:—"ஐயையா! தமிழ் பேசியவுடனேயே உமது ஆசை எம்மிடத்திற்கு வரும்படிசெய்தது. இன்னும் ஏதாவது என்னிடம் விசேஷமிருந்தால் என்ன செய்வீரோ அறியேன்."

"ஸ்வாமிகளே! தாங்கள் ஞானிகள். என் குமாரன் ஒருவனைத் தேடிக்கொண்டு எட்டு வருஷமாய் அலைகிறேன். ஆள் மாநிறமாயிருப்பான். இடதுகையில் ஆறுவிரலிருக்கும்"

தமிழ் பேசும் சந்நியாசி உடனே தனது இடதுகையை மறைத்துக்கொண்டனர். லோகநாதய்யர் உடனே அவரை யாவலுடன் ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு சிவசாம்பா! சிவசாம்பா! என்று இருமுறைகூறி பிடித்த பிடிவிடாமல் அவர்மேல் சாய்ந்துவிட்டனர்.

* * *

தமிழ்தெரிந்த சந்நியாசி:—இது என்ன தர்மசங்கடம்! சுவாமிகளே! என்னை விடுங்கள், உங்களுக்கு சுகிர்தமுண்டு, விடுங்கள்! என்று பலதடவை உபயோகமின்றிக் கூறியதன்றி கைப்பிடியை நீக்கிக்கொள்ளவும் பிரயத்தனப்பட்டார்.

பிறகு இதுவும் தெய்வ சங்கல்பமென்று பிர்ம்மதியானத்திலிருந்து விட்டார். காலையில் நிஷ்டையிலிருந்து எழுந்து, தன்னை இரவில் கட்டிக்கொண்டு அதேபிடியா யிருப்பவர் முகத்தை உற்றுப்பார்த்தார். "நீரே மகாபுண்ணிய சீலர். இந்த ஸ்தலமே உமக்கு மோக்ஷம் கொடுப்பதாயிருக்க, புத்திர ஸந்தானத்தையும் விரும்பினீரோ"? என்று சொல்லிக்கொண்டு, அவர் இடையில் கட்டிக்கொண்டிருந்தபையை சோதித்தார். அதில் முப்பது பவுன்களிருந்தன. அவைகளை அவ்விடத்தி லிருந்தவர்களுக்குக் கொடுத்துவிட்டு, அவர் தேகத்தை எடுத்துக்கொண்டு போய் கங்காநதி யோரத்தில் வைத்து கங்கை நீரால் அபிஷேகஞ்செய்து, தலையில் தேங்காயுமுடைத்து, தோணியின் மூலமாய் நடுகங்கைக்கு எடுத்துச்சென்று கங்கை நீரில் போட்டுவிட்டனர்.

மறுநாள், ஒருவர் கேதாரேஸ்வரர் ஆலயத்தில் இறந்து போனதாகவும் அவரிடம் 300 பவுன்களிருந்ததை ஒரு சந்நியாசி எடுத்துக்கொண்டு அவர் தேகத்தை கங்கையில் போட்டு விட்டதாகவும் போலீசாருக்குத் தெரிந்து இவரை பிடித்துக் கொண்டு போய் சோதிக்க, ஒன்று மகப்படாத படியால் சப் ஜெயிலில் அடைத்து வைத்தனர். ஜெயில் அறை பூட்டப்பட்டிருந்ததன்றி போலீஸ்க்காரர்களும் பாராக்கொடுத்துக் கொண்டு விழித்திருந்தனர். மறுநாள் போலீஸார் ஜெயில் அறையைத்திறந்து பார்க்க நமது ஸ்வாமிகளைக்காணவில்லை, தேடுகிறார்கள், இன்னும் தேடுகிறார்கள்.

ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலில்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந்தந்தம்.
விதியின் பயனே பயன்.

T. C. வேங்கடரமணையர்.

## லலிதாம்பாள் சோபனம்.

(92-வது பக்கத்தொடர்ச்சி.)

---

### பண்டாஸுரன் யுத்தத்திற்கு வருதல்.

125.

சேனாபதிகள் முதல் தம்பிகள் வரைக்கும்
செலவாய்ப் போனதைக்கேட்டுப் பண்டாஸு
[ரன்
மானங்கெட்டவன் இன்னம் பின்னதிகோபமாய்
மாஹேஸ்வரியைவைது திட்டிக்கொண்டு—
கடித்துக்கொண்டான் பல்லுக்களையும் உதட்டை
கண்களிலே அனற்பொரி பறக்க— [யும்
குடிலாக்ஷனைப்பார்த்து ஆக்கினை செய்கின்றான்!
கும்பக்குழந்தாய்கேள் சோபனம் சோபனம்.

126.

கேளாய் குடிலாக்ஷ லலிதை யென்பவள் ஒருத்தி
கேடுசெய்தாள்நமக் கினியவளை—
வாளாலே லேசுலேசாகவே செய்கின்றோம்
வருவித்திடுவாய் என்றன் சேனையெல்லாம்!
முன்கோட்டை வாசலில் காக்குஞ் சேனையைத்
[தள்ளி.
மிச்சம் மீதியாயுள்ள சேனையெல்லாம்
பெண்கள் தவிர மற்றப்பேர்களும் புறப்பட்டார்
பெண்கொடி லலிதைக்குச் சோபனம் சோப
[னம்.

127.

கழுதைகட்டின தேர்கள் குதிரைகட்டினதேரும்
கடுவாய் காடி சிம்மம் ஒட்டைமுதல்—
கழுகுக்கொடி கோழி காக்காய் பிராந்துமுதல்
கரும்பன்றி செந்நாய் பாம்புகளும்
பூதப்பிரேத பேதாள வாகனத்திலும்
பின்னும் அனேக வாகனங்களிலும்
விதவிதமாயாயுதங்கொண்டு வருகின்றான்
விச்வேச்வரிக்குஜயம் சோபனம் சோபனம்.

128.

இரண்டாயிரத்து - நூற்றன்பத்தஞ்சு - அக்ஷௌஹி
சேனைகள்தன்னை நடத்திக்கொண்டு [ணி
பண்டாஸுரனுந் தேரிலேறியே புறப்பட்டான்
அபசகுனங்கண்டான் அஸுரனங்கே!
முன்பூமி நடுங்கிற்று, ஆகாசத்திலிருந்து
முன்விழுந்தது ரத்தஞ் சோனையாக—
கொம்பானைகளுடைய கொம்புகள் முறிந்தது
குணநாதைக்கே ஜயம் சோபனம் சோபனம்.

129.

எல்லா உற்பாதமும் எண்ணாமல் வருகின்றான்
இலவம்பஞ்சு தீயில் பறக்கின்றாப்போல்
பொல்லாத காலத்தால் பண்டாஸுரன் சேனை
புறப்பட்ட தம்மனை ஜயிக்கவென்றே!
துஷ்டப் பண்டாஸுரன் வருகிறதைக்கண்டு
சூர்ய சந்திரன் ஏழு சமுத்திரமும்
அஷ்டதிக்கஜங்களும் அலறி நடுங்கிற்று
அம்மனுக்கே ஜயம் சோபனம் சோபனம்.

### லலிதாம்பிகையுடன் பண்டாஸுரன் யுத்தஞ் செய்தல்.

130.

இப்படிப் பண்டாஸுரன்வந்து சேனையை - ஏவி
சக்தி சேனையை அடிக்க— [னான்
அப்போ சக்திகள்கண்டு அதிகோபத்துடனே
அக்னிக் கோட்டைக்கு வெளியில்வந்தார்கள்
மகாராஜராஜேஸ்வரி லலிதாம்பிகை
வம்பன் பண்டாஸுரன் வருகைகண்டு
ஓகோ இவனை வேறுவெல்வாரில்லை என்று
யுத்தமுனையில் வந்தாள் சோபனம் சோபனம்.

131.

அக்கினிக்கோட்டைக்கு வெளியில வந்தாள் - ஸ்ரீ
சக்கரத்தில் சுபசகுனங் கண்டாள்
ஒப்பமற்ற அஸுரான் தம்பட்டமுரசுகள்
உக்கிரகமாய்க் கொம்பும் ஊதிக்கொண்டு
சக்தி தேவிகளை அஸுரர்கள் எல்லாரும்
சண்டை பிடித்தடிக்கத் துவக்கினார்கள்.
சக்திதேவிகள் அப்போ அஸுரசேனைகளை
சம்ஹரித்திடுகின்றார் சோபனம் சோபனம்.

132.

சுற்றிலுந் தேவிகள் அஸுரசேனைகளை
சுற்றிப்பிடித்திழுத்துக் கத்தியாலே
குத்தினார் சிலசக்தி ஈட்டிகளினாலே
பொத்தென்று தலைவிழ வெட்டுகின்றான்
செண்டு செண்டாய் யானை துண்டந் துண்டமா
[ய்விழக்
கண்டங் கண்டமாய்க் குதிரைவிழ
மண்டைகளும் அஸுரான் உடல்களும் உருளுத
மஹாதேவிக்கே ஜயம் சோபனம் சோபனம்.

133.

தேவர்களுஞ் சொர்ண புஷ்பமாரி சொரிந்து
திவ்ய சகுனங்களைக் காட்டினார்கள்.
கோபத்துடனே பண்டாஸுரன்முழிசிவக்கவே
கொடூரமாய் உருட்டி முழித்துக்கொண்டு
தன்சேனையஸுரானுக்கபஜயத்தைக் கண்டு
தாய் லலிதாதேவியோடெதிர்த்தான்
அஞ்சாதே தேவியும் பண்டாஸுரனைப் பார்த்து
அதிக கோபங்கொண்டாள் சோபனம் சோப
[னம்.

134.

கண்டகன் பண்டனைக் கண்டவுடன் தேவிக்கு
இரண்டு கண்ணும் அக்னிபோல் சிவக்க

மண்டலம் புகழ்கின்ற சண்டப்ர சண்டஉத்
தண்டமான கோதண்டவில்லை
வட்டமாய் நாணாலே கட்டியிழுத்தாளம்மன்
மூட்டிவிட்டாளெங்குந் தட்டுக்கெட!
துஷ்டனுமஸுரனைப் பொட்டென வதைக்கவே
சட்டமிட்டாள் மனதில் சோபனம் சோபனம்.

## பண்டாஸுரனால் ஏவப்பட்ட மாயாஸ்திரங்களை-அம்பிகையால் ஏவப்பட்ட மாயாசக்திகள் அழித்தல்.

135.

தொடுத்தார் யுத்தத்துக்கு தேவியும் பண்டனும்
தொகையில்லாச் சரமாரிகளைச் சொரிந்தாள்
இடைவிடாமல் சரங்களைச் சொரிந்தாளம்மன்
இதைக்கண்டு பண்டாஸுரன் கோபமாய்
மாயையால் இருட்டவிட்டான் அஸுரன்;அஃதை
மாதாவும் சூர்யாஸ்திரத்தால் போக்கினாள்.
பேயன் குருடாஸ்திரம் விட்டான் அஃதையும்
போக்கிற்று நேத்ராஸ்திரம்! சோபனம் சோப
[னம்.

136.

வாயுவின் அஸ்திரத்தை பண்டாஸுரன் போட்
[டான்
பார்க்கவி அஸ்திரத்தாலே போக்கினாள்!
ஓயாத வியாதிகளை அனுப்பிவைத்தான்
ஒன்று பத்து நூறு கோடியாக
அச்சுதானந்த கோவிந்த நாமத்ரய
அஸ்திரத்தையம்மன் அனுப்பிவிட்டாள்-
மிச்சமில்லாமலே வியாதிகளையந்த
அச்சுதர் போக்கினார் சோபனம் சோபனம்,

137.

அநகாஸ்திரத்தை அனுப்பிவைத்தான் பண்டன்
அம்பிகை மிருத்யுஞ்செயனால் ஜயித்தாள்!
மந்திரத்தால் சும்பனிசும்பன் சண்டமுண்டன்
மஹிஷாஸுரனையவன் அனுப்பிவைத்தான்-
அம்மனட்டஹாஸத்தாலே துர்காதேவியுண்டாகி
அஸுரனை ஸம்ஹரித்தாள்! சோபனம் சோப
[னம்.

138.

முன்னே வேதங்களைத் திருடின சோமுகன்
முதலான அஸுரரை அனுப்பிவைத்தான்-
தன்னையடுத்தபேர்க் கபயங்கொடுத்து
தற்காக்கும் வலக்கைகட்ட விரலை
உதறிவிட்டாளம்மன்: அதிலே இருந்து
உண்டாகிவந்தார் மச்யமூர்த்தியும்!
வதைத்தந்த அஸுரரெல்லாரையும் செயித்த
மஸ்யாவதாரர்க்குச் சோபனம் சோபனம்.

139.

சமுத்திரத்தை வருத்திவிட்டான் பண்டன்
சக்திசேனைகளை முழுகடிக்க
நிமிஷத்தில் அம்மன் உதறினளப்போ
நீட்டும் ஆள்காட்டி விரலதனை
குதித்தாருடனே யதிலேயிருந்து
கூர்மாவதார மகாவிஷ்ணுவும்
கதிக்கின்ற சமுத்திரங்களை எல்லாங்குடித்த
(ஸ்வாமி) கூர்மாவதாரர்க்குச் சோபனம் சோப
[னம்.

140.

இரணியாக்ஷதனை அதிகோபத்துடனே
இந்தப் பண்டாஸுரன் அனுப்பிவைத்தான்
வராகமூர்த்தியும் உண்டானாரப்போ வலக்கை
நடுவிரலில் இருந்துவந்து-
பொல்லாத ஹிரண்யாக்ஷ அஸுரரை எல்லாம்
சற்றுப்போதைக்குள்ளே ஸம்ஹரித்தார்!
வெல்லமுடியாத ரூபந்தரித்த லக்ஷ்மி
வராகமூர்த்திக்குச் சோபனம் சோபனம்.

141.

இரணியகசிபு முதலஸுரரை எல்லாம்
இந்தப் பண்டாஸுரன் வருத்திவிட்டான்
பரமேஸ்வரியும் வலக்கைப் பவித்திர
விரலையசைத்தாள் அதிலிருந்து
அதிக பராக்கிரம நரஸிம்மரும் வந்து
அஸுரஹிரண்யனை சம்ஹரித்தார்!
நாகசயனர் பக்தர் பிரகலாதர் லக்ஷ்மி
நரஸிம்மமூர்த்திக்குச் சோபனம் சோபனம்.

142.

மஹாபலிமுதலான அஸுரசேனைகளை
வருத்திப்போகச் சொன்னான் பண்டாஸுரன்
மகமாயையும் வலக்கைச் சுண்டுவிரலை
சுழட்டியே உதறினாள் அதிலிருந்து
வந்தார் மகாவிஷ்ணு வாமனமூர்த்தியாய்
மாபலி அஸுரனையுஞ் செயித்து!
மாபலியை ஜயித்துப் பாதாளத்தில் தள்ளின
வாமனமூர்த்திக்குச் சோபனம் சோபனம்,

143.

கார்த்தவீர்யார்ச்-சுனனைச் சேனைகளுடனே
கண்டகன் பண்டன் அனுப்பிவைத்தான்
ஆர்திகளைப்போக்கும் லலிதேஸ்வரியும்
அசைத்தாள் இடக்கைக் கட்டைவிரலை
பரசுராமர் கையிற் கோடாலிகொண்டு
புறப்பட்டார் வெள்ளிமலையைப்போலே!
பலமுள்ள கார்த்தவீர்யார்ச்சுனனை வதைத்த
பரசுராமருக்கு சோபனம் சோபனம்.

144.

இராவண கும்பகர்ணனிந்திரசித்தன்
இராக்ஷதரையவன் அனுப்பிவைத்தான்
தேவியும் இடக்கையின் ஆள்காட்டிவிரலை
செப்பிடுவித்தைபோல் உதறினளே
ஸ்ரீ ராமலக்ஷ்மண ரதிலிருந்துண்டாகி
ராவணன் முதலோரை வதைகள் செய்தார்.

தாமஸியாமல் ராக்ஷதாளை வதைத்த
ஸ்ரீ ராமலக்ஷ்மணர்க்குச் சோபனம் சோப
[னம்.

145.

வானரங்களையும் வருத்திவிட்டான் பண்டன்
மலைமலையாகவே தேவிமேலே
விஜய அம்மன் இடக்கை நடுவிரலை
மின்னல் மின்னினாற்போலே உதறினாளே !
பலபத்திரரும் வந்தார் கைலாஸமலைபோலே
பெரிய உலக்கை கலப்பைகொண்டு!
உலக்கை கலப்பையால் குரங்குகளைக் கொன்ற
உக்கிரபுலருக்குச் சோபனம் சோபனம்.

146.

சிசுபாலன் கம்ஸன் சகடன் பூதனை தன்னை
துஷ்டன் பண்டாஸுரன் அனுப்பிவைத்தா
விச்வேச்வரியும் இடக்கைப் பவித்திர [ன்.
விரலை அசைத்தாள் அதிலிருந்து
சங்கிருஷ்ணன் ப்ரத்யும்னன் அநிருத்தன்
(னாகவே) ஸ்வாமி வந்திவர்களைச் சங்கரித்தார்!
சங்கிருஷ்ணன் அநிருத்தன் ப்ரத்யும்னன்
(முதலிய) ஸ்வாமி நாலுபேருக்கும் சோபனம்
[சோபனம்.

147.

கலியுகாஸ்திரத்தாலே துலுக்கர் மிலேச்சரைக்
கண்டகன் பண்டன் அனுப்பிவைத்தான்.
கல்யாணியும் இடக்கைச் சுண்டுவிரலைக்
காட்டி அசைத்தாள் அதிலிருந்து-
அட்டஹாஸத்துடன் கல்கி அவதாரமாய்
அச்சுதரும் வந்தார் அந்தக்ஷணம்!
மொட்டைத்துலுக்கர் மிலேச்சரை வதை
(செய்த) முராஹரிகல்கிக்கு சோபனம் சோப
[னம்.

148.

பின்னும் அனேகம் மோகனாஸ்திரந்தன்னை
பூட்டிவிட்டான் சக்திசேனையின்மேல்
அக்ரோம் அம்மனும் சாம்பவர் அஸ்திரத்தால்
அதையும் விமோசனம் செய்துவிட்டாள்.
அக்ஷோகிணிசேனையை நாராயணாஸ்திரத்தால்
பஸ்மமயமாக ஆக்கிவிட்டாள்-
தக்ஷன் குடிலாக்ஷன் முதற் சேனாபதிகளை
சிதைத்தாள் பாசுபதத்தால்! சோபனம் சோப
[னம்.

149.

பின்னும் அனேகம் அஸ்திரத்தினாலே அஸுரன்
அக்ஷோகிணிசேனை போனபின்பு-
என்னபலம் லலிதாதேவிக்கென்று
ஏங்கி முழிக்கின்றான் பண்டாஸுரன்!
அம்மனும் தம்முடநாதர் காமேசரை
அந்தரங்கத்திலேதான் நினைந்து
காமேசர் அஸ்திரத்தால் ஜயம் வரட்டுமென்று
கணவரை வேண்டினாள் சோபனம் சோபனம்.

பண்டாஸுரன் வதை.

150.

கண்டகன் பண்டாஸுரனை வதைக்கவென்றே
காமேசரும்அஸ்திரங் கொடுத்தார்-
வாங்கிக்கொண்டு அம்மன்காமேசர் அஸ்திரத்தை
மண்டலாஹாரமாய் வில்வளைத்து
கோடி சூர்யன்போன்ற காமேசர்பாணத்தைக்
கோதண்டத்தில்வைத்து ஸந்தானித்து
வேடிக்கையாகவே காதுபரியந்தம்
விசையாய் இழுத்துவிட்டாள்! சோபனம் சோ
[பனம்.

151.

தேவிபிரயோகித்த அஸ்திரந்தானப்போ
தேவேந்திரன் வஜ்ஜிராயுதத்திடிபோல்
தாவிப்பண்டாஸுரன் மார்பிலேபாய்ந்தது
தரணியிலேவிழுந்து உயிரைவிட்டான்!
அஸ்தமனத்தில் பண்டாஸுரனை வதைத்து
அம்மன் ஜயங்கொண்டாள் சோபனம் சோப
[னம்.

152.

புஷ்பம் பன்னீர்களைச் சொரியவே தேவர்கள்
புகழ்ந்துசகிகள் வெண்சாமரைவீசவே
அப்பொழுது தேவி சக்திசேனையுடன்
சிவாலயத்தை அம்மன் வந்தடைந்தாள்!
ஆயுதங்களாலே அடிபட்ட சக்திகள்
காயத்தை அமிர்தக் கண்ணால்போக்கினாள்!
நோய்கள்போனதுபோலே சுகம்பெற்றார்-பூமியும்
புசிதமாய்ச் செழித்தது சோபனம் சோபனம்.

153.

மும்மூர்த்திகள் முதல் முப்பத்துமுக்கோடி
தேவர்கள் முனிவர்கள் பிராமணரும்
அம்மனைவந்து அடிபணிந்துகொண்டு
அற்புதமான ஸ்துதிகள் செய்தார்!
அமராளும் மன்மதன்தேவிரதியைக்காட்டி
அறிவித்தார் மதனனை எழுப்பவென்றே
‘இம்மாத்திரந் தயவுசெய்ய வேண்டுமம்மா
எங்களுக்காய்வேண்டிச்’ சோபனம் சோபனம்.

154.

‘இரதியுடைய கணவன் மன்மதனை
எழுப்பித்தந்து எங்கள் மனங்குளிர
எவ்விதமாவது தயவுசெய் நீசரும்
ஈஸ்பரியைக்கூடி சுப்ரமண்யர்
பிறந்துதாருகன் முதல் அஸுரர்களை வதைத்தா
பிறகு சங்கடமில்லை எங்களுக்கு’ (என்று) [ல்
கூடியே தேவர்கள் எல்லாருங்கைகளை
கும்பிட்டு நின்றார்கள் சோபனம் சோபனம்.

155.

கண்டவுடனே ரதிதேவியை அம்மன்
காமேசர்முகத்தை ஆதரவாய்ப் பார்த்தாள்
உண்டாய்விட்டான் மதன் வஜ்ஜிரதேகத்துடன்
உடனே தாயாரை நமஸ்கரித்தான்!

அனுக்ரகித்தாள்தேவி மன்மதனுக்கு
ஆருமினியிவனை ஜெயிக்காமல்,
வானவரும் இனி ஜெயிக்கமாட்டார்களென்று
வரமுங்கொடுத்துச் சொல்வள் சோபனம் சோ
[பனம்.

156.

குழந்தாய் உனக்குப்பயமில்லை இனிமேல்
கூட்டிவை பார்வதியுடன் ஈசரை
தழுதழுத்தன்னுட பாணத்தால் சங்கரர்
தானே விவாகஞ்செய்வர் பார்வதியை!
ஒருவர் கண்ணுக்கும் இனி நீ அகப்படமாட்டாய்
உன்னைத்தாஷித்தபேர் அண்ணு விழுக!
சற்றும் பயமில்லை நாமிருக்கிறோமென்று
சங்கரியனுப்பினுள் சோபனம் சோபனம்.

157.

குமாரமூர்த்தி அவதாரமாகி தாருகன் முதலிய அஸுரரை வதைத்தல்.

அம்மன் அனுக்ஞையால் மதனன் பூச்சரத்தாலே
அடித்தான் பார்வதி பரமேசரை
வந்து விவாகஞ்செய்து ரமித்தார் சிவன்!
குமாரரும் உண்டானர் சிவனிடத்தில்!
கொய்துதாருகன்முதல் அஸுரரைவதைத்த
கோலவேல வருக்குச் சோபனம் சோபனம்.
தேவ சேனுபதியாய் தெய்வானையை மணந்து
ஸ்ரீபுரந்தனில்வந்தார் சோபனம் சோபனம்.

லலிதாம்பிகையின் ஸ்ரீபுரவர்ணனை.

158.

ஸ்ரீபுரமென்றதைக் கேட்டதுமகஸ்தியர்
தவமுனி ஹயக்ரீவரைப் பார்த்து
ஸ்ரீபுரமென்பதை விஸ்தாரமாகச்
சொல்லவேண்டுந் தயவாக வென்றார்!
அன்புடன் வார்த்தையைக்கேட்டு மயக்கிரீவர்
அகஸ்திய முனிவரைப்பார்த் துரைப்பர்:
இன்பங்க ளுண்டாகத் தேவியின் நகரத்தை
இனிச்சொல்வோங்கேளென்றார் சோபனம்
[சோபனம்.

159.

பண்டாஸுரனை வதைத்த சந்தோஷத்தால்
பரமேச் வரிக்கும் காமேசருக்கும்
தேவசேனுபதியும் தேவர்களுமாய்க்கூடி
ஸ்ரீ லலிதாம்பாள் கொலுவிருக்க
ஈச்பரியாளுக்குச் சிந்தாமணிக்கிரகம்
விச்வகர்மாவை அமைக்கச் சொன்னார்!
மகிழ்ந்து விச்வகர்மா இவாள் சொன்னபடிக்குப்
புகழ்பெற ஸ்ரீபுரஞ் செய்தார் சோபனம் சோ
[பனம்.

ஸ்ரீபுரத்தின் விபரம்.

160.

தரணியில் ஒன்பதும் சமுத்திரத்தில் ஏழும்
தேவிக்குப் பதினறு ஸ்ரீபுரங்கள்
மேருகிரியிலொரு ஸ்ரீபுரமுண்டதை
முன்னாலே உமக்கதைச் சொல்லுகின்றேன்.
மூவராலும் ஆதிசேஷராலுஞ் சொல்லி
முடியாது அம்மன் புரமகிமை
சாவதானமாகக் கேட்கவேணுமிதை
தனயனே சொல்லுவேன் சோபனம் சோபன
[ம்.

161.

ஒன்றுமது கோட்டை இரும்பாக்குமதற்கு
உயரம் நானூறு யோசனைகள் உண்டு
நன்றாகநூறு யோசனையகலங்காண்
நான்கு புரத்திலும் வாசலுண்டு
வாசல்கள்தோறும் கோபுரமுண்டு அதற்கு
வரியாகத் தட்டுக்கள் இருபத்தஞ்சு
யோசனைக்கு ஒருதட்டு வீதங்கணக்கு
உச்சி மகுடம் மூனு சோபனம் சோபனம்.

162.

இந்த வாசற்போலே நாலுவாசலுக்கும்
இதுபோலே கோபுரத்தட்டுமுண்டு
இந்தக்கோட்டை வாசல் கதவு கோபுரமுதல்
எல்லாம் இரும்புப்பணி இதைப்போலே
எந்தக்கோட்டைகளினி சொல்லப்போகின்றோமோ
அந்தக்கோட்டையும் இதுபோலகஸ்தியா
இந்தக்கோட்டை கழிந்தப்புறமுள்ளது
ஏழு யோசனையுண்டு சோபனம் சோபனம்.

163.

ஏழு யோஜனையுள்ள நடு இடைவெளி தன்னில்
எல்லா மரங்களும் நிறைந்திருக்கும்
தோழாகேள் ஏழு யோசனையோடே விஸ்தாரம்
சொல்லப்போகிறோம் கோட்டை இடைநடுவி
காளியுங் காளரும் சக்திகளுடனே [ல்
காலசக்ராசனத்தில் இருந்து
லலிதையுடைய நாமஞ்செபித்து ஒன்றுங் கோட்
[டை
ரக்ஷிக்கிறாள்என்றுஞ் சோபனம் சோபனம்.

164.

வெண்கலக் கோட்டையில் வஸந்தருதுக்காவல்
வேலியும் கற்பக விருக்ஷமாக்கும்
தங்கச்செம்பு கோட்டையில் வேலி அரிசந்தனம்
சுசியான கிரீஷ்மருதுக்காவல்
ஈயக்கோட்டையின்வேலி சந்தன விருக்ஷங்கள்
எங்குஞ் சுற்றிக்காவல் வருஷருது
முன்னால் உருக்குக் கோட்டையின்வேலி மந்தாரை
செளுந்த சரத்ருதுக்காவல் சோபனம் சோப
[னம்.

165.

பஞ்சலோகத்துக் கோட்டைக்குபாரிஜாதம்வேலி
ஹேமந்தருதுக்காவல் காததூரம்,
மஞ்சப்பொன்கோட்டைக்குமந்திரிணிமுதலான
சக்திகள் கிரகம்சுற்றிச்சசிருதுக்காவல்!
பிக்ஷக்ரகததுக்குச் சித்தர்களும்—சுத்தப்
பெண்டுகளுங்குடி இருக்கின்றார்கள்.
பிக்ஷக்ரசம் கழிந்தப்புறஞ் சாரணர்
பத்மராகக்கிரகம் சோபனம் சோபனம்.

166.

அழகிய கந்தர்வாள் வைரக்கிரகந் தன்னில்
அதற்குப்பின் யோகிகள் வஜ்ஜிரக்ரகம்
புதுசாக ரத்னமும் வைடூரியத்தாலும்
பின்னிந்திரக் கல்லாலு முள்ளகிரகம்
முத்துக்குழுசூழும் மாகதத்தால் கிரகம்
மின்போல் வாராகிக்கு நாலுகிரகம்
சுத்தமான கிரகம் பிர்மாவினுடையது
செம்பவழத்தாலே சோபனம் சோபனம்.

167.

மாணிக்க மண்டபத்தில் விஷ்ணுவும் இருக்
கின்றார்—மண்டபத்தினிடையில் சிவலோகம்.
(மனக்) கோட்டையில் ஆனந்தர் வர்ணமுள்ள
கோட்டை, அதற்கிடையில் சூர்யனின்விமா
[னம்
பகவான் மார்த்தாண்டவர் பைரவர் இருப்பு
பக்தரே கேளின்னஞ் சோபனம் சோபனம்.

168.

சந்திர விம்பத்தில் ஸ்ரீங்காரமாகவே
சரியாக இருபத்தஞ்சு கோட்டையும்
சுந்திரமான கோபுரங்களும் நூறண்டு
தொகையொரு கோட்டைக்கு நான்குவீதம்
அப்புறந்தாமரைப் பூக்கள்வனம்
ஆறுயோஜனைக்கு நிறைந்திருக்கும்
விப்பிரனே அதற்குக் கிழக்காகவே யெங்கும்
சுற்றிக் கதம்பவனம் சோபனம் சோபனம்.

169.

அதற்குக்கிழக்கிலே மும்மூர்த்திகளுக்கும்
அகங்கள் மூணுபத்ம அடவியிலே.
இதற்குநடுவிற் சிந்தாமணி ரத்னத்தாலே
ஈச்பரி லலிதாதேவி கிரகம்
நாலுபுரம்வாசல் உண்டதற்குச்சியில்
ஞானரத்னத்தினுலே மகுடம்
வலதுபுறத்திலே மந்திரிணி கிரகம்
வாராகிக் கிடப்புறம் சோபனம் சோபனம்.

170.

அக்கினி மூடுக்கிலே அக்கினி குண்டம்
அதற்குமேலே நிற்கும் ஸ்ரீசக்கரத்தேர்
நிற்கின்றதே வாயுமுடுக்கில் மந்திரிணிதேர்
நேரே ஈசான்யத்தில் வாராகிதேர்.
இந்தநடுவிலே சக்திகளுடைய கிரகம்
சிந்தாமணிக் கிரகத்தைச் சுற்றிலும்
சிந்தாமணிக்கிரகம் சிந்தாமணிச்சுவர்
சுற்றிலும் தீபங்கள் சோபனம் சோபனம்.

171.

சிந்தாமணிக் கிரகத்தின் நடுமத்தியில்
சிந்தாமணியாலே ஸ்ரீபீடம்
ஐம்மூன்று தட்டந்த ஸ்ரீபீடத்திற்கு
ஆயிரத் தறுனூறுமுழம் வீதி
கைமுழத்திற் கிருபதுமுழ உயரந்தட்டு
கடலைக்குடித்தகஸ்தியா! சோபனம் சோபன
[ம்

172.

தட்டுத்தோறும் இதுபோல் உயரம்வீதி
தட்டுத்தோறுஞ் சக்திகள் இருக்கிறார்கள்!
திட்டமாய் ஸ்ரீபீடத்திற் கப்புறத்திலே
ஸ்ரீங்காரப்படி முப்பத்தாறு ஸ்தம்பம்
வட்டமான இந்தபீடத்தில் ஈசர்பிர்மா
மாதவர் ருத்திரர் கட்டிலின்கால்
கட்டிற்பலகை சிவனுமேயாக சதாசிவன்தானும்
[பாயாக
ஈசானன் தலையணையாகவமைய சோபனம் சோப
[னம்.

173.

மஞ்சத்தின்மேல்அம்ஸதூளிகாமெத்தைபோட்
வட்ட இருபுறந்தலை யணையும் [டு
மஞ்சத்தின்மேலே கிழக்கைப் பார்த்திருக்கின்
மன்மத கோடிபோல் காமேசரும் [றார்
நாதர்காமேசர் மடிமேல் கிழக்கைப்பார்த்து
தாய் லலிதாதேவியும் இருக்காள்பார்!
பாலா லலிதாதேவிக்கு நித்தியம்
பதினாறு வயசென்றும் சோபனம் சோபனம்.

174.

தேவிக்குஉயரநாற்பது முழத்திற்குமேல்
தேசத்திற் கொப்பில்லா மேல்கட்டிலில்
† யமுனைகைஆரமாய்ச்சுற்றியிருக்கின்றாள்
இஜ்ஜகத்தை மோகிப்பிக்கும் மாயை!
தேவியுடைய சௌபாக்கியத்திற்கொப்பில்லை
தேவிதானறிய வேணுமகஸ்தியா
நாவாலும் மனதாலும் எண்ணமுடியாத
ராஜேஸ்வரி மகிமை சோபனம் சோபனம்.

† இது குண்டலிநிசக்தி. அதாவது உடலைப்பாம்புபோல் மூன்று சுற்றாய் வளைத்துகொண்டிருப்பவள்

175.

### தேவியின் ஸ்ரீவித்தை ஜபத்தின் மகிமை உரைத்தல்.

மந்திரங்களுக்கெல்லாம் பெரிதான ஸ்ரீவித்தை
மகாகுருவிடத்தினில் வேண்டிக்கொண்டு
மந்திரத்திற்குச் சொன்னஜபஹோமங்கள் செய்து
மகிமைதேவாளுக்குப் போஜனமளித்து
பின்னர் தேவியை பரமாத்மாவாகத்தியானித்து
பிறகு காம்யஜபம் செய்தபேர்க்கு
எண்ணின காரியம் கைகூடும் ஜகத்திலே
இவர்கள் எங்கும் பூஜ்யை சோபனம் சோப [னம்.

176.

அசுத்தத்துடன் சோபனத்தைச் சொன்னபேர்க்
அலங்கதிச்சபேர்க்கும் பிணிகளுண்டு. [கும்
அசுத்தமில்லாமலும் அசங்கதியாமலும்
அம்மன் சோபனமென்று பக்தியுடன்
விஸ்வாஸமாய்ச் சொன்னபேர்கட்கும் கேட்போர் [க்கும்
வியாதியில்லை சத்துருபாதையில்லை.
நிஜமாய் ஜ்வரம்ஹாரி ரோகாதிகளில்லை
நித்திய சம்பத்துண்டு சோபனம் சோபனம்.

177.

இந்தச் சோபனம் பாடும் வாழ்வாசிகள் எல்லாம்
தேவிகளென்று மனதிலெண்ணும்.
சந்தனந்தாம்பூலம் குங்குமம் பழம் புஷ்பம்
சந்தோஷமாய் எல்லவர்க்குங் கொடுத்து
எந்தெந்தக் கிரகங்களில் சொல்லவைத்துக்
கேட்டாளோ அந்தந்தக் கிரகங்களின் அனிஷ்[டம்நீங்கும்
சுந்தரி கிருபையாலே சந்ததிவிருத்திக்கும்
தீர்க்காயுஸும் உண்டு சோபனம் சோபனம்.

178.

### தேவியை பூஜிக்கவேண்டிய முக்ய-காலங்கள் உரைத்தல்.

அன்பாய் நவராத்திரி பௌர்ணமி சுக்கிரவாரம்
அம்மன் சோபனந்தன்னைச் சொன்னபேர்க்கு
துன்பங்கள் உண்டாகமாட்டாது ஒருக்காலும்
தென்திசையையடையார் தினஞ்சொன்னவா
ரொம்பச்சொல்லுவானேன் தேவிதாஸாளுக்கு[ள்
திரிலோகமும் அவர்கட்கு ஜயம்.
நம்பினபேர்களைக் காத்திடத்தேவியல்லால்
நாட்டிலே வேறுண்டோ சோபனம் சோபனம்

179.

அத்திரி மகாரிஷி ஆசிரமத்தில் அநுஜையை
கேட்டஞான ரகஸியத்தை-
நல்த்துரையில் வாழும் லக்ஷ்மிகடாக்ஷத்தால்
நாராயணனுரைத்த தேவி மகிமை.
ராஜேஸ்வரியாள் மகிமை யகஸ்தியரும்
ஆதரவாய்ச் சொல்லச் சொன்னதற்கு
நாடுசெழிக்க அவதரித்துவந்த மாதவர்
அறிவித்தார் சோபனம் சோபனம்.

180.

அறிந்தறியாதே இந்தச் ஸோபனத்திலே
அர்த்த அக்ஷரப்பிழை இருந்தாலும்
மகப்பிரபு மனுஷப்பிரபு விஷ்ணு என்பதுபோலு[ம்
மராமரா என்றதோர் நாமம்போலும்
வாதாசிவர்ணு சிவசங்கர நாமம்போலும்
வார்த்தை பிழைகள்தன்னைப் பொறுத்து
எதுவிதத்திலும் தேவியைத்தியானித்தால்
ஏழைக்கிரங்குவள் சோபனம் சோபனம்.

181.

### மங்களவாழ்த்து.

ஜயமங்களம் லலிதாதேவிக்கும்
ஜயமங்கம் காமேச்வரர்க்கும்
ஜயமங்களம் மந்திரிணி தண்டநாதைக்கும்
ஜயமங்களம் சர்வசர்வசக்திகட்கும்
ஜயமங்களம் ஹயக்ரீவருக்கும்
ஜயமங்களம் அகஸ்தியமாமுனிக்கும்
ஜயமங்களம் சர்வஜனங்கட்கும் நமக்கும்
ஜயமங்களம் நித்திய சுபமங்களம்.

(சோபனம் முற்றுப்பெற்றது.)

ஓம் தத்ஸத் பிர்மார்ப்பிதமஸ்து
ஓம் தேவ்யை நம :